# கிறிஸ்தவம்

## தரம்

## 6

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



‘‘புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்’’

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக் கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம்

**ஆர். டீ. விஜேவிக்ரம**
பிரதி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**அ. ஞானேஸ்வரன்**
அபிவிருத்தி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## ஆலோசனை

**அருட்பணி. டபிள்யூ. பீ.எபனேசர் ஜோசப்**
பொது செயலாளர்
தேசிய கிறிஸ்தவ மன்றம்.

**அருட்பணி. கலாநிதி ரியன்சி பெரேரா**
குருமுதல்வர், காலி பிரதேசம்

## பதிப்பாசிரியர் குழு

**மகேஸ்வரி சபாரஞ்ஜன்**
பணிப்பாளர்
தோட்ட பாடசாலைகளின் அபிவிருத்தி பிரிவு
கல்வி அமைச்சு

**எம். ஹேமசந்திர பெரேரா**
உதவி பணிப்பாளர் - கிறிஸ்தவம் (ஓய்வு பெற்ற)
கல்வி அமைச்சு

**பியுலா ரோசா**
விரிவுரையாளர்,
கல்வியல் கல்லூரி (ஓய்வு பெற்ற)

## எழுத்தாளர் குழு

**அருட்பணி. மிகிரி டீ. சில்வா சல்காது**
செயலாளர், கிறிஸ்தவ கல்வி மன்றம்
தேசிய கிறிஸ்தவ மன்றம்

**நிலந்தி தீபா டீ சில்வா**
ஆசிரியர்
மெதடிஸ்த உயர் கல்லூரி
புவக் அரம்ப, மொரட்டுவ.

**எம். ரதீகா சமந்தி மென்டிஸ்**
ஆசிரியர்
தூய தோமையர் கல்லூரி
கல்கிசை.

**வினிதா எம். த. சில்வா**
செயலாளர், கிறிஸ்தவ கல்வி மன்றம், (ஓய்வு பெற்ற)
தேசிய கிறிஸ்தவ மன்றம்.

**அருணி ஜயதுங்க**
ஆசிரியர்
பிஷப் கல்லூரி
கொழும்பு.

**அருட்பணி. சி. டபிள்யூ. சி. பால்ராஜ்**
அதிபர்
பரி. தோமஸ் கல்லூரி,
பண்டாரவளை.

**டி. குளோரி எப்சிபா**
கிறிஸ்தவ ஆசிரியர்
இந்து கல்லூரி
கம்பளை.

**எம். பி. செல்வநிதி பெரேரா**
கிறிஸ்தவ ஆசிரியர்
வெஸ்லி கல்லூரி
கொழும்பு.

## பதிப்பாசிரியர் (மொழி)

**ஜே. நேசசீலன்**
கிறிஸ்தவ ஆசிரியர் (ஓய்வு பெற்ற)
தூய தோமையர் கல்லூரி,
குருத்தலாவ.

## கணினி வடிவமைப்பு

**நாகரட்ணம் சந்திரப்பிரியா**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## சித்திரம் அட்டைப்படம்

**சஜித் இஷான் ஹெட்டியாராச்சி**

## பொருளடக்கம்

# 1 இறைவனின் அழகிய படைப்பு




ஒரு வகுப்பு மாணவர்கள் மூன்று குழுக்களாக பிரிக்கப்பட்டு வெளியில் சென்று சில அவதானிப்புகளை மேற்கொள்ள அறிவுறுத்தப்பட்டனர். அவர்களுடைய அவதானிப்பைத் தொடர்ந்து நடைபெற்ற உரையாடலை இங்கு நாம் பார்ப்போம்.

ஆசிரியர் : நாங்கள் இப்போது வெளியில் சென்று எமது சுற்றாடலை அவதானிப்போம். நாங்கள் மூன்று குழுக்களாக பிரிவோம். குழுக்களை பின்வருமாறு பெயரிடுவோம்.

1) தர்ஷினி *(காண்பவை)* 2) மெவான் *(கேட்பவை)*
3) தானியேல் *(உணர்பவை)*

எமது சுற்றாடலை நன்கு அவதானித்து அவற்றை பதிவு செய்யுங்கள். மீண்டும் வகுப்பிற்கு வந்து அவற்றைப் பற்றி நாம் கலந்துரையாடுவோம். *(தமது அவதானிப்புகளை மேற்கொண்டு, படிவங்களை நிரப்பி மாணவர்கள் வகுப்பிற்கு வந்த பின் கலந்துரையாடல் தொடர்ந்தது).*

ஆசிரியர் : தர்ஷினியின் குழு பார்த்தவற்றைப் பற்றி கூறுவதை நாம் கேட்போம்.

தர்ஷினி : மரங்கள், பூக்கள், நாய்க்குட்டி ஒன்று, பறவைகள், எறும்பு, தேனீ, வானத்தில் மேகங்கள், சூரியன் போன்றவற்றைப் பார்த்தோம்.

ஆசிரியர் : நீண்டபட்டியல், மிகவும் நன்று. மெவானின் குழு தாம் கேட்டவற்றை இப்போது கூறுவார்கள்.

மெவான் : நாய்க்குட்டி குரைப்பதைக் கேட்டோம். குருவிகளின் கீச் கீச் சத்தம் கேட்டது. இலைகள் காற்றில் அசையும் சத்தம் கேட்டது.
மாணவர்கள் கதைக்கும் சத்தம், பாடசாலை மணி அடிக்கும் சத்தம் போன்றவற்றையும் கேட்டோம்.

ஆசிரியர் : நன்றி மெவான் குழு. நன்கு செவிசாய்த்திருக்கின்றீர்கள். இப்போது தானியேலின் குழு.........

தானியேல் : பூக்களின் நறுமணம், வெயிலின் வெப்பம் என்பவற்றை உணர்ந்தோம். காற்று வீசியதும் சற்றுகுளிர்ந்தது. நாங்கள் ஒவ்வொரு இடத்திலும் நடக்கும் போது சந்தோஷமாக இருந்தது.

ஆசிரியர் : மிகவும் நல்லபிள்ளைகள். நன்கு பார்க்கக் கூடியவர்களும், நன்கு கேட்கக்கூடியவர்களும், நன்கு உணரக்கூடியவர்களும் இவ்வகுப்பில் இருக்கின்றார்கள். நானும் இந்தவகுப்பைக் குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். இப்போது எம் அனைவருக்கும் எமது சுற்றாடலைக் குறித்து நல்ல அறிவு கிடைத்திருக்கும் என்று நான் எண்ணுகிறேன். எம்மைச் சுற்றியுள்ள இறைவனின் படைப்பு எவ்வளவு அழகானது! இவை அனைத்தும் எமக்கு எவ்வாறு கிடைத்தது என்று பார்ப்பதற்கு நாம் திருவிவிலியத்தை வாசிப்போம். அதில் முதலாம் நூல் யாது ?

பதில் : தொடக்கநூல்

ஆசிரியர் : ஆம், தொடக்கநூல் படைப்பின் ஆரம்பத்தைப் பற்றி கூறுகின்றது. நாம் ஒவ்வொருவராக உலக ஆரம்பத்தைப் பற்றி திருமறை கூறும் கருத்துக்களை வாசிப்போம்.

தயாளன் : தொடக்கத்தில் கடவுள் விண்ணுலகையும் மண்ணுலகையும் படைத்தார்

தொடக்கநூல் 1:1

ஆசிரியர் : பாருங்கள், படைப்பையும், படைப்பாளரையும் குறித்து கூறுவதன் மூலம்தான் திருமறை ஆரம்பிக்கின்றது! கடவுள் முறையாக ஒவ்வொன்றையும் படைத்துள்ளதை நாம் காணலாம்.

சரோஜா : கடவுள் ''ஒளிதோன்றுக!'' என்றார். அப்போது ஒளிதோன்றிற்று. கடவுள் ஒளி நல்லது என்று கண்டார். கடவுள் ஒளியையும் இருளையும் வெவ்வேறாகப் பிரித்தார். கடவுள் ஒளிக்கு'பகல்'என்றும் இரவிற்கு 'இருள்' என்றும் பெயரிட்டார்.

தொடக்க நூல் 1: 3-5

ஆசிரியர் : ஆம், அது படைப்பின் முதலாம் நாள். தொடர்ந்தும் கடவுள் ஒவ்வொன்றாகப் படைத்தார்.

புனிதா : ''நீர்த்திரளுக்கு இடையில், வானம் தோன்றுக! அது நீரினின்று நீரைப் பிரிக்கட்டும்!'' என்றார். கடவுள் வானத்தை உண்டாக்கி வானத்திற்கு கீழுள்ள நீரையும் மேலுள்ள நீரையும் பிரித்தார். அது அவ்வாறே ஆயிற்று. கடவுள் வானத்திற்கு'விண்ணுலகம்' என்று பெயரிட்டார்.

தொடக்கநூல் 1: 6

நான் அடிக்கடி வானத்தைப் பார்த்துக்கொண்டு இருப்பேன். அதை கடவுள் படைத்தார் என்பது இப்போது விளங்குகின்றது.



படம் 1.1 இறைபடைப்பு

ஆசிரியர் : ஆம் புனிதா, கடவுளின் படைப்பில் நாம் புரிந்துகொள்ள வேண்டியவை நிறைய இருக்கின்றன. அடுத்து என்ன படைக்கப்பட்டது என்பதைப் பார்ப்போம்.

சாந்தி : ''அப்பொழுது கடவுள், ''விண்ணுலகுக்குக் கீழுள்ள நீர் எல்லாம் ஓரிடத்தில் ஒன்றுசேர உலர்ந்த தரை தோன்றுக!'' என்றார். அது அவ்வாறே ஆயிற்று. கடவுள் உலர்ந்த தரைக்கு 'நிலம்' என்றும் ஒன்று திரண்ட நீருக்குக் 'கடல்' என்றும் பெயரிட்டார். தொடக்க நூல் 1: 9-10

அப்போது கடவுள், ''புற்பூண்டுகளையும் விதைதரும் செடிகளையும், கனிதரும் பழமரங்களையும் அந்த அந்த இனத்தின் படியே நிலம் விளைவிக்கட்டும்'' என்றார். புற்பூண்டுகளையும் விதையை பிறப்பிக்கும் செடிகளையும் கனிதரும் மரங்களையும் அந்த அந்த இனத்தின்படி நிலம் விளைவித்தது. தொடக்க நூல் 1: 11-12

ஆசிரியர் : நாம் இப்போது கடவுளின் படைப்பின் நான்காம் நாளுக்கு வந்துவிட்டோம் அல்லவா?

பிரசாந் : ஆகாயத்தில் உள்ளவற்றைப் பற்றி அறிந்து கொள்வதற்கு எனக்கு விருப்பம் டீச்சர். நான் அதை வாசிக்கின்றேன்.

ஆசிரியர் : நல்லது பிரசாந்த், வாசியுங்கள்.

பிரசாந்த் : (உரத்த சத்தத்தோடு) கடவுள் இரு பெரும் ஒளிப்பிழம்புகளை உருவாக்கினார். பகலை ஆள்வதற்குப் பெரிய ஒளிப் பிழம்பையும், இரவை ஆள்வதற்கு சிறிய ஒளிப்பிழம்பை யும் மற்றும் விண்மீன்களையும் அவர் உருவாக்கினார்.

தொடக்கநூல் 1:16

ஆசிரியர் : அடுத்து கடவுள் உயிருள்ளவற்றைப் படைத்தார். ஐந்தாம் நாளில் படைக்கப்பட்டவற்றைப் பார்ப்போம்.

பிரவீன் : அப்பொழுது கடவுள், ''திரளான உயிரினங்களைத் தண்ணீர் தோற்றுவிப்பதாக! விண்ணுலக வானத்தில் நிலத்திற்கு மேலே பறவைகள் பறப்பனவாக!'' என்றார். இவ்வாறு, கடலின் பெரும் பாம்புகளையும், திரள் திரளாக நீரில் நீந்திவாழும் உயிரினங்களையும், இறக்கையுள்ள எல்லா விதப் பறவைகளையும் அவ்வவற்றின் இனத்தின்படி கடவுள் படைத்தார்.

தொடக்கநூல் 1: 20-23

தயாளன் : எங்கே, கடவுள் இன்னும் மிருகங்களையும், ஊர்வன வற்றையும் படைக்கவில்லையே!

ஆசிரியர் : தயாளன் சற்று காத்திருக்க வேண்டும். தொடர்ந்து வருவதை தயாளன் வாசியுங்கள்.

தயாளன் : அப்பொழுது கடவுள், ''கால்நடைகள், ஊர்வன, காட்டு விலங்குகள் ஆகியவற்றை அவ்வவற்றின் இனத்தின் படி நிலம் தோற்றுவிப்பதாக'' என்றார். கடவுள் காட்டு விலங்குகளையும் கால்நடைகளையும் நிலத்தில் ஊர்வன யாவற்றையும் அவ்வவற்றின் இனத்தின்படி உருவாக்கினார்.

தொடக்கநூல் 1: 24-25

பிரசாந்த் : பாடசாலையிலிருந்து மிருகக்காட்சிசாலைக்கு நாம் சென்ற போது இம்மிருகங்கள் எல்லாவற்றையும் கூடுகளிலும், குகைகளிலும் பார்த்தோம். ஆனால் இப்போதுதான் அவை படைக்கப்பட்ட விதம் பற்றி திருமறையில் எழுதப் பட்டிருப்பதை அறிந்தோம். கடவுளின் படைப்பு மிகவும் வியப்பானது.

ஆசிரியர் : இப்போது புனிதா, 27ம், 31ம் வசனங்களை வாசியுங்கள் பார்க்கலாம்.

புனிதா : கடவுள் தம் உருவில் மானிடரைப் படைத்தார். கடவுளின் உருவில் அவர்களைப் படைத்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்.

தொடக்கநூல் 1: 27

கடவுள் தாம் படைத்த அனைத்தையும் நோக்கினார்.
அவை மிகவும் நன்றாய் இருந்தன.

தொடக்க நூல் 1:31



படம் 1.2 இறைபடைப்பு

ஆசிரியர் : படைப்பின் இறுதியில் கடவுள் ஆணையும் பெண்ணையும் படைத்து தனது படைப்புச் செயலை நிறைவு செய்தார். கடவுளுடைய சாயலில் மனிதனைப் படைத்து முழுப் படைப்பையும் பராமரிக்கும் பொறுப்பையும் படைப் பாளராகிய மனிதருக்கு கொடுத்தார். கடவுளே இறை சாயலில் படைக்கப்பட்ட எமக்கு கடவுளுடன் உரையாட வும், கடவுளுக்கு செவிசாய்க்கவும், கடவுளின் கட்டளை களுக்கு ஏற்ப நடக்கவும் சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தந்துள்ளார்.

எனவே கடவுள் ஏழாம் நாளை ஆசீர்வதித்து புனிதப்படுத்தி அதை சிறப்பான தினமாகத் தந்துள்ளார். கடவுளுடைய பிள்ளைகளாகிய நாம் அன்றைய தினத்திலே படைப் பாளராகிய கடவுளை போற்றி மகிமைப்படுத்தவும், நன்றி யோடு வணங்கவும் வேண்டும் என்று கடவுள் எம்மிடம் எதிர்பார்க்கின்றார்.

எனவே நாம் இப்போது கடவுளின் இவ்வழகிய படைப்புக்காக நன்றி கூறி மன்றாடுவோம்.

**மனனவசனம்**
**தொடக்கநூல் 1:1-2**

**தொடக்கத்தில் கடவுள் விண்ணுலகையும், மண்ணுலகையும் படைத்த பொழுது, மண்ணுலகு உருவற்று வெறுமையாய் இருந்தது. ஆழத்தின் மேல் இருள் பரவியிருந்தது. நீர்த்திரளின் மேல் கடவுளின் ஆவி அசைந்தாடிக் கொண்டிருந்தது.**

செயற்பாடு

1. ஒவ்வொரு படைப்பின் முடிவிலும் அதை ‘‘நல்லது’’ என்று கடவுள் கண்டார். உம்மை இவ்வுலகில் படைத்ததின் மூலம், கடவுளின் படைப்பு தொடர்பாக உம்மிடம் இருந்து எதை எதிர்பார்க்கின்றார்?

# 2 இறைபடைப்பின் மகிமை

அண்டசராசரத்தையும் படைத்தவர் சர்வவல்லமையுள்ள ஒரே கடவுள் என்பதை முன்னைய பாடத்தில் நாம் கற்றோம். இவ்வுண்மையை நாம் திருமறையிலிருந்து அறிந்து கொண்டோம். இது என்றுமே மாறாத உண்மையாய் இருக்கின்றது.

மனிதர்களாகிய நமது வாழ்வு உட்பட முழுப் படைப்பையும் உண்டாக்கிய கடவுள், நம்மீது கொண்டுள்ள அன்பின் நிமித்தம் நமது வாழ்வுக்குத் தேவையான அனைத்தையும் தமது படைப்பின் மூலம் நமக்குத் தந்திருக்கின்றார்.

முன்னைய பாடத்தில் நாம் வாசித்த திருமறைப் பகுதியிலிருந்து (தொடக்க நூல் 1:6-25) இறைவன் அனைத்தையும் நமக்கு தந்தருளுகின்றார் என்பதை அறிந்து கொள்வோம்.




அதிகாலையில் சூரியன் உதிக்கும் போது எமக்கு இன்னுமொரு புதிய நாள் கிடைக்கின்றது. சூரிய ஒளி வீசும் போது நாம் அந்நாளுக் குரிய வேலையை ஆரம்பிக்கின்றோம். சூரியஒளி தரும் சக்தியானது மரம், செடி, கொடிகளின் வளர்ச்சிக்கு மிகவும் அவசியமாகும். சூரிய ஒளியிலிருந்து மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கும் மனிதர் தமது அறிவைப் பயன்படுத்தியுள்ளனர். சூரியன் மறையும் போது நாம் நமது நாளின் வேலையை முடித்து, இரவின் நித்திரைக்கூடாக ஓய்வு பெறுகின்றோம்.

எம்மைக் குறித்து கரிசனை கொள்ளும் இறைவன், இரவின் இருளில் வெளிச்சத்தை தருவதற்காக சந்திரனை வானத்தில் உண்டாக்கினார். அதன் மூலம் இரவுவேளைகளில் கடலில் பயணம் செய்யும் மாலுமிகளும் மீனவர்களும் வெளிச்சத்தைப் பெறுகின்றார்கள். சந்திரனின் தாக்கத்தால் கடல் நீர் கொந்தளிக்கின்றது. சந்திரனைக் கொண்டு காலங்களும் தீர்மானிக்கப்படுகின்றது.



படம் 2.1 இறைபடைப்பு - சூரியன் , சந்திரன், நட்சத்திரம்

சந்திரனில் இருந்து தெறிப்படையும் ஒளியைத் தவிர இரவு நேரத்தில் ஒளிரும் நட்சத்திரங்களும் அழகிய காட்சியாகும். நட் சத்திரங்களின் அமைப்பைக் கொண்டு சமுத்திரங்களைக் கடப்பவர்கள் திசைகளைப் பற்றியும் அறிந்து கொள்ளலாம். விண்ணில் உள்ளவை யாவற்றையுமே மனிதரின் நன்மைக்காகவே இறைவன் படைத்தார். இறைவன் நமக்காகப் படைத்துள்ள அனைத்தும் போற்றத்தக்கதே.

சூரியஒளியைப் போலவே உயிர்களின் வாழ்விற்கு படைப்புகளில் மிகவும் தேவையான இன்னுமொன்று தண்ணீர் என்பதை அறிவீர்களா? தண்ணீர் இன்றி எதுவுமே உயிர்வாழமுடியாது. மலை உச்சியிலிருந்து தோன்றும் நீர்வீழ்ச்சி, அருவி, ஆறு, கடல், சமுத்திரம் போன்றவற்றை இறைவன் தாமே நமக்காகப் படைத்தார்.



படம் 2.2 இறைபடைப்பு

இறைவனின் படைப்பாகிய வெவ்வேறு வகையான தாவரங்கள் இயற்கையை அழகுபடுத்துகின்றன. அத்தோடு அவை நமக்கு போசனை யையும், சுகத்தையும், நிழலையும் தருகின்றன. அவற்றை வளரச் செய்து எமது இன்னும் பலதேவைகளை இறைவன் சந்திக்கின்றார்.

அப்பொழுது கடவுள், ''புற்பூண்டுகளையும் விதைதரும் செடி களையும், கனிதரும் பழமரங்களையும் அந்த அந்த இனத்தின்படியே நிலம் விளைவிக்கட்டும்'' என்றார். அது அவ்வாறே ஆயிற்று. புற்பூண்டுகளையும் விதையைப் பிறப்பிக்கும் செடிகளையும் கனிதரும் மரங்களையும் அந்த அந்த இனத்தின்படி நிலம் விளைவித்தது. கடவுள் அது நல்லது என்று கண்டார் *(தொடக்க நூல் 1:11-12)*



படம் 2.3 இறைபடைப்பு

இவை வளர்ந்து கனிகொடுப்பது இறைவனின் திட்டமாகும். நாம் சுவைக்கும் இக்கனிகள் இறைவனின் கொடையாகும். எமக்கு போசனையைத் தரும் நெல், பலா, தேங்காய் போன்றவை படைப்பாளராகிய இறைவனின் கொடையாகும். எமது நாட்டில் வளரும் முள்முருங்கை, தேங்காய்பூ கீரை, மரமஞ்சள் போன்ற மூலிகைத் தாவரங்கள் நாம் நற் சுகத்துடன் வாழ்வதற்காக படைப்பாளராகிய இறைவன் நமக்கு வழங்கிய கொடையாகும். நாம் விருப்பத்துடன் சுவைக்கும் றம்புட்டான், தோடம்பழம், மாம்பழம், நெல்லிக்கனி போன்றவையும் இறைவனின் கொடையே. எமது வீடுகளுக்குத் தேவையான தளபாடங்களைச் செய்வதற்காக தேக்கு, பலா, முதிரை, மற்றும் பாலை போன்ற பெரியமரங்களும் இறைவனால் படைக்கப்பட்டவையே. இவ்வாறான பெரியமரங்கள் திடீரென்று பெரியவை ஆனவையல்ல. மாறாக சிறிய வித்திலிருந்தே இவ்வாறு வளர்ச்சி அடைந்துள்ளன. இவ்வளர்ச்சியும் இறைவனின் படைப்பே.

எமது சூழலை அழகுபடுத்துவதுடன் எமக்கு நறுமணத்தையும் இன்பத்தையும் தரும் கவர்ச்சியான நிறங்களுடைய மலர்களும் இறைவனின் படைப்பே. மலர்கள் மனிதருக்கு மாத்திரமல்ல வண்ணத்துப்பூச்சி, தேனீ, சிலபறவைகள் போன்றவற்றிற்கும் மிகவும் பயன்படுகின்றன



படம் 2.4 இறைபடைப்பு

யானை, ஒட்டகம், குதிரை, ஆடு, மாடு போன்ற மிருகங்கள் எமது தேவைகளை சந்திப்பதுடன் படைப்பின் மகிமையையும் பூரணப்படுத்துகின்றன. அத்தோடு விலங்குகளிடமிருந்து கருணை, நன்றியுணர்வு, ஒத்துழைப்பு, சுறுசுறுப்பு போன்ற பல நல்ல பண்புகளையும் நாம் முன்மாதிரியாகப் பெற்றுக்கொள்ளலாம்.

இவை அனைத்தையும் இறைவன் படைத்து, எமது பயன்பாட்டிற்குத் தந்து இயற்கையை எம்மோடு இணைத்துள்ளார். அனைத்தையும் படைத்த இறைவன் நமது தேவைகளை படைப்பின் மூலம் பூர்த்தி செய்கின்றார் என்பதை இப்பாடத்தின் மூலம் அறிந்தோம்.

படைக்கப்பட்ட அனைத்திற்கும் மேலாக, பெறுமதிமிகுந்தவர்களாக இறைவன் மனிதரை வைத்துள்ளார். எனவே, நாம் இறைவனின் படைப்பிலிருந்து பல பயன்களைப் பெறும் அதேவேளை, அப்படைப்பை பராமரிக்கவும் பாதுகாக்கவும் கடமைப்பட்டுள்ளோம்.

ஆண்டவர் நல்லவர்; என்றும் உள்ளது அவர்தம் பேரன்பு; தலைமுறை தோறும் அவர் நம்பத்தக்கவர்.




திருப்பாடல் 100:5

**நீர்த்துளிகளை அவர் ஆவியாக இழுக்கின்றார் அவற்றை மழையாக வடித்துக் கொடுக்கிறார். முகில்கள் அவற்றைப் பொழிகின்றன மாந்தர்மேல் மிகுதியாகப் பெய்கின்றன.**

செயற்பாடு

1. நாம் சுவைக்கும் சோறு எமது கரங்களுக்கு கிடைக்குமுன் அது தொடர்பாக செயல்பட்டவர்களையும் அவர்கள் செய்த வற்றையும் பட்டியல்படுத்துக.

2. கடவுள் அனைத்தையும் படைத்தவர், எமது தேவைகளை சந்திப்பவரும் அவரே! படைப்பில் எமது தேவைகளை சந்திக்கும்
   1) தாவரங்கள் 2) மிருகங்கள்
   3) மனிதர்களின் சேவைகளை பட்டியல்படுத்துக.

# 3 இறைபடைப்பின் சிகரம் - மனிதன்










இந்த அதிசயம் மிகுந்த உலகத்தை கடவுள் படைத்தார் என்பதை கடந்த இரு பாடங்களிலும் நாம் அறிந்துகொண்டோம். வான் உலகையும் மண் உலகையும், தாவரங்கள், பழமரங்கள், பூஞ்செடிகொடி, மிருகங்கள், பறவைகள் போன்ற அனைத்தும் கடவுள் எமக்கு கொடுத்த கொடைகளாகும். நீர்வீழ்ச்சிகள், நீர்த்தேக்கங்கள், ஆறுகள் போன்றவற்றையும் படைப்பின் வெவ்வேறு வர்ணங்களையும், நறுமணங்களையும், சுவைகளையும் நாம் பார்த்துணரும் போது படைப்பாளராகிய கடவுளின் மேன்மை நமக்கு நன்கு புலப்படுகின்றது.

திருவிவிலியத்திற்கு அமைய படைக்கப்பட்ட அனைத்துக்கும் சிகரமாக மனிதனை கடவுள் நியமித்துள்ளார். அதாவது கடவுளின் பார்வையில் மனிதர்கள் பெறுமதிமிக்கவர்கள். மனிதர்கள் படைக்கப்பட்டதைப் பற்றி திருவிவிலியம் பின்வருமாறு கூறுகின்றது.

***‘‘கடவுள் தம் உருவில் மானிடரைப் படைத்தார். கடவுளின் உருவிலேயே அவர்களைப் படைத்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்’’.***

தொடக்க நூல் 1: 27-28

ஆணையும் பெண்ணையும் இறைவன் தமது சாயலில் படைத் திருக்கின்றபடியால், மனிதர் படைப்புக்கள் எல்லாவற்றிலும் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளனர். ஆண்களும் பெண்களும் இறைவனின் சாயலில் படைக்கப்பட்டிருக்கின்றபடியால் அவர்கள் சம இடத்தில் இருக்கின்றார்கள். இறைவனுடைய சாயல் மனிதரில் காணப்படுவதால், மனித தன்மையின் மேன்மையை நாம் அறிந்து, மனிதத்துவத்தை மேலும் வளர்க்கும் விதத்தில் வாழவேண்டும்.

***சிறுவர்களாகிய நாம் மனிதர் பெற்றிருக்கும் இம்மேன்மையையும் பெறுமதியையும் அறிந்துகொள்வோம்! அதனை வளர்த்திடுவோம்! அதனைப் பாதுகாப்போம்!***




மேலே காட்டப்பட்டுள்ள படத்தில் குறிப்பிடப்பட்டுள்ள குணாதிசயங்கள் மனித வாழ்வுக்கு மிகவும் அவசியமானவை. வளர்ந்தவர்களில் மாத்திரமல்ல, சிறியவர்களிலும் அந்த தன்மைகள் காணப்படுகின்றன. அனைத்து தன்மைகளும் ஒரே அளவில் காணப்படாவிட்டாலும் கூட, உங்கள் ஒவ்வொருவரிலும் அவை வெவ்வேறு அளவில் காணப்படும் என்பது நிச்சயமாகும். நல்ல

ஒரு பிள்ளையாக இவ்வுலகில் வாழ்ந்த இயேசுவில் இத்தன்மைகள் நிறைவாகக் காணப்பட்டன. கிறிஸ்தவ பிள்ளைகள் ஒவ்வொருவரிடமும் இத்தன்மைகள் வளர வேண்டும் என்று இயேசு எதிர்பார்க்கின்றார்.

உங்களுடைய வீடுகளில், பாடசாலையில் அல்லது சமூகத்தில் மற்றவர்களுடன் நீங்கள் தொடர்புகொள்ளும் போது அன்பு, பொறுமை, ஒற்றுமை, கருணை, பகிர்வு, சகோதரத்துவம் இரக்கம் போன்ற உயர்ந்த தன்மைகளை வளர்க்க முற்பட வேண்டும். அதற்காக கடவுளின் அருளை நீங்கள் கேட்க வேண்டும்.

உங்களுக்கு இந்த வாழ்வைத் தந்தவர் இந்த உலகத்தை படைத்த கடவுள். இன்று சிறுபிள்ளைகளாக இருக்கும் நீங்கள் வளர்ந்து பெரிய சேவையை செய்ய வேண்டும் என்று கடவுள் உங்களிடம் எதிர்பார்க்கிறார். எனவே சிறுவயது முதல் இயேசுவை அறிந்து, உங்களுடைய வாழ்வை இயேசு எதிர்பார்க்கும் வாழ்வாக மாற்றி அமைத்துக்கொள்ளுங்கள்.

### செயற்படுவோம்



***ஏதேன் தோட்டத்தைப் பண்படுத்தவும் பாதுகாக்கவும் ஆண்டவராகிய கடவுள் மனிதனை அங்கு கொண்டுவந்து குடியிருக்கச் செய்தார்.***

தொடக்க நூல் 2:15

கடவுள் மனிதனை (ஆணையும் பெண்ணையும்) உண்டாக்கிய பின்பு அவர்கள் மகிழ்ச்சியாய் வாழ்வதற்குத் தேவையான சூழலை ஏதேன் தோட்டத்தில் உருவாக்கிக் கொடுத்தார்

அத்தோடு அவர்களுக்கு ஒரு பொறுப்பையும் கொடுத்ததாக தொடக்கநூல் 2:15 இல் நாம் வாசிக்கின்றோம். நிலத்தைப் பண்படுத்துவதும் பாதுகாப்பதுமே அந்த பொறுப்பு.
இவ்வுலகில் வாழும் நம் அனைவருக்கும் இப்பொறுப்பு உரித்தாகின்றது.

*மனனவசனம்:*
*தொடக்கநூல் 1:27*

கடவுள் தம் உருவில் மானிடரைப் படைத்தார். கடவுளின் உருவிலேயே அவர்களைப் படைத்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்.

செயற்பாடு

1. சூழல் அழிவுக்குட்படுத்தப்படும் சந்தர்ப்பங்கள் 5 எழுதுக.

2. அவ்வழிவுகள் ஒவ்வொன்றையும் தடுப்பதற்கு எடுக்கக்கூடிய நடவடிக்கைகளை முன்வைக்கவும்.

# 4 கிறிஸ்துவின் அதிசயப் பிறப்பு

கிறிஸ்தவர்களாகிய எமக்கு உலகிலேயே மிகவும் அதிசயமான பிறப்பு இயேசுவின் பிறப்பாகும். தீமையிலிருந்து எம்மைக் காப்பாற்றி இறைவனின் பிள்ளைகளாக்குவதற்கே இயேசு இவ்வுலகில் பிறந்தார். இறைவன் மனிதர் மீது கொண்டுள்ள அன்பின் நிமித்தமே இயேசுவை இவ் வுலகிற்கு அனுப்பினார். இயேசுவின் பிறப்போடு தொடர் புடையவர்களையும், சம்பவங்களையும் அறிந்து கொள்வதின் மூலம் இயேசுவின் பிறப்பின் சிறப்பை விளங்கிக் கொள் ளலாம்.

வாசிப்போம்:
லூக்கா 1:26-31
லூக்கா 2: 1-20



## காபிரியேல் வானதூதர்



படம் 4.1 காபிரியேல் வானதூதர்

காபிரியேல் வானதூதர் கடவுளுக்குப் பணியாற்றுகிறவராகவும், கடவுளின் நற்செய்தியைக் கொண்டு வருபவராகவும் அறியப்பட்டு உள்ளார். இயேசு பிறப்பதற்காக மரியா தெரிவு செய்யப்பட்டு உள்ளார் என்ற செய்தியைக் கொடுத்தவர் காபிரியேல் வானதூதர் ஆவார். பிள்ளைக்கு இயேசு என்று பெயரிடவும், அவர் இரட்சகர் என்பதையும் அறிவித்தவர் இவரே (மத். 1:21). இயேசுவின் பிறப்பைக்

குறித்த வானதூதரின் அறிவித்தல், அப்பிறப்பை அதிசயப் பிறப்பாக மாற்றியுள்ளது. இடையர்களுக்கு இயேசுவின் பிறப்புபற்றிய செய்தி வானதூதர் கூட்டத்தினால் கொடுக்கப்பட்டது. இச்சம்பவங்கள் மூலம் இயேசுவின் பிறப்பின் அதிசயத் தன்மையை நாம் அறிந்துகொள்ளலாம்.

## மரியாவும் யோசேப்பும்



படம் 4.2 மரியாவும் யோசேப்பும்

இயேசுவின் பிறப்பிற்காக தான் தெரிவு செய்யப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டதும் மரியா மிகவும் அச்சம்கொண்டார். ஆனாலும் அவர் தாழ்மையாக நடந்து இறை திட்டத்திற்கு கீழ்ப்படிந்தார்.

யோசேப்பும் இந்த சிறப்பான பிறப்பிற்காக இறை சித்தத்திற்கு கீழ்ப்படிந்தார். அவருடைய கீழ்ப்படி வினால் மரியாவை நன்கு கவனித்துக் கொண்டார்.

## இடையர்கள்



படம் 4.3 இடையர்கள்

இயேசுவின் பிறப்பை முதன் முதலாக வானதூதர்கள் இடையர்களுக்கு அறிவித்தனர். அன்றைய சமூகத்தின் செல்வந் தர்களுக்கோ, உயர்பதவி வகித்த வர்களுக்கோ அன்றி ஏழை இடையர்களுக்கே இயேசுவின் பிறப்பு செய்தி அறிவிக்கப்பட்டது.

இந்த செய்தியைக் கேள்வி பட்டதும் அவர்கள் எழுந்து சென்று இயேசு பாலகனைக் கண்டார்கள். இச்சம்பவமும் இயேசு வின் பிறப்பின் அதிசயத்தையே உணர்த்துகிறது.

## ஞானிகளும் சிறப்பு விண்மீனும்



படம் 4.4 ஞானிகளுக்கு வழிகாட்டிய விண்மீன்

இயேசுவின் பிறப்பின் அதிசயத்தை உணர்த்தும் இன்னொரு சம்பவம் ஞானிகள் வானத்தில் எழுந்த ஒரு விண்மீனால் பிறப்புபற்றி உணர்த்தப்பட்டதாகும். இந்த விண்மீன் அவர்களை இயேசு பிறந்த இடமான பெத்தலகேமுக்கு வழிநடத்தியது. அவர்கள் ஆரம்பத்தில் ஏரோதுவின் மாளிகைக்கு சென்றாலும், பின்னர் அந்த விண்மீனைப் பின் தொடர்ந்து பெத்தலகேமுக்குப் போனார்கள்.

அவர்கள் பொன், சாம்பிராணி, வெள்ளைப்போளம் ஆகியவற்றை காணிக்கையாகக் கொடுத்து வணங்கினார்கள். அவ்வாறே இறை ஏவுதலால் கனவில் எச்சரிக்கப்பட்டு, ஏரோது அரசனின் மாளிகைக்குச் செல்லாது, வேறு வழியாகத் தங்கள் நாடு திரும்பினார்கள். இயேசுவின் பிறப்பின் அதிசயத் தன்மைக்கு இச்சம்பவம் இன்னொரு சான்றாகும்.

## தீவனத் தொட்டி

குழந்தை இயேசுவை சரியாகக் கண்டு கொள்ளுவதற்கு வானதுதர்கள் கொடுத்த அடையாளமானது ‘குழந் தையை துணிகளில் சுற்றித் தீவனத் தொட்டியில் கிடத்தியிருப்பதைக் காண்பீர்கள்’ என்பதாகும்.

இறைமைந்தன் ஏழையாக பிறந்ததும், பெத்தலகேமில் சத்திரத் தில் இடம் இல்லாமல் மாட்டுத் தொழுவ தீவனத் தொட்டியில் பிறந்த சம்பவமும் இயேசுவுடைய அதிசயப் பிறப்பை எடுத்துக் காட்டுகின்றது.



படம் 4.5 தீவனத் தொட்டி

*மாட்டுத்தொழுவத்தில் இயேசு பிறந்தது, அவர் ஏழைக்கோலம் எடுத்தது மாத்திரமல்ல ஏழ்மைக்கு எதிரான அவருடைய சவாலையும் எடுத்துக்காட்டுகின்றது.*

*இயேசுவின் பிறப்போடு தொடர்புபட்ட சம்பவங்களுள் வான தூதர்களின் பாடல் பொருள் மிகுந்ததாகும்.*

***"உன்னதத்தில் கடவுளுக்குமாட்சி உரித்தாகுக!***
***உலகில் அவருக்கு உகந்தோருக்கு***
***அமைதி உண்டாகுக!"***

இயேசுவின் பிறப்பின் சிறப்புத்தன்மையை விளங்கி நாம் செயல்பட வேண்டும்.
வானதூதர் பேரணி கடவுளைப் பாடி புகழ்ந்தது போல, இயேசுவின் பிறப்புச் செய்தியை
உலகிற்கு அமைதி உண்டாக்கும் செய்தியாக நாம் அறிவிக்கலாம்.
இயேசுவின்பிறப்பானது கடவுளுக்கும் மனிதருக்கும், மனிதருக்கும் - சக
மனிதருக்கும் இடையில் உள்ள உறவைப் புதுப்பித்து, ஒற்றுமையையும்,
அமைதியையும் ஏற்படுத்தியது.

***மனனவசனம்:***
***லூக்கா 2: 11-12***

**இன்று ஆண்டவராகிய மெசியா என்னும் மீட்பர் உங்களுக்காகத்**
**தாவீதின் ஊரில் பிறந்திருக்கிறார். குழந்தையைத் துணிகளில்**
**சுற்றித் தீவனத்தொட்டியில் கிடத்தியிருப்பதைக் காண்பீர்கள்.**
**இதுவே உங்களுக்கு அடையாளம் என்றார்.**

செயற்பாடு

1. திருமறையில் காணப்படுவது போல் குழந்தை இயேசுவைக் காண வந்தவர்களைக் குறிப்பிடுக.

2. இயேசு பிறப்பைக் கொண்டாடும் கிறிஸ்தவர்கள் மேற்கொள்ளும் நற்செயல்கள் மூன்றை குறிப்பிடுக.

# 5 இயேசுவின் இளமைப் பருவம்

இயேசு தனது இளமைக் காலத்தில் கடவுளாலும் மனிதராலும் போற்றப்பட்டு வளர்ச்சி அடைந்தார். அவ்வாறே எருசலேம் கோவிலை கடவுளின் இல்லமாகக் கருதி செயல்பட்டார். இளமையிலும் கடவுளைப் பற்றி நன்கு அறிந்திருந்தார். இவற்றைக்குறித்து இப்பாடத்தில் நாம் கற்பதன் மூலம் சிறியோர் எமது வாழ்விற்கான முன்மாதிரியையும் சவாலையும் நாம் பெற்றுக்கொள்கின்றோம்.






படம் 5.1 இயேசு தேவாலயத்தில் போதகர்களின் நடுவில்

இயேசுவுக்குப் பன்னிரண்டு வயது ஆனபோது, மரியாவும் யோசேப்பும் இயேசுவை அழைத்துக்கொண்டு எருசலேம் ஆலயத்துக்கு போனார்கள்.

யூத சட்டத்துக்கு அமைய பன்னிரண்டு வயதை அடைந்த ஆண் பிள்ளைகள், பெரியவர்களாக கருதப்படுவதாலும், அப்பருவத்தில் இருந்து திருக்கோவில் வழிப்பாட்டில் பங்கு பெறவும், சமயக் கல்வியைப் பெறவும், தேவாலயத்தில் நடைபெறும் விழாக்களில் பங்குபெறவும் அவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்படும்.

யூத மக்களின் பாஸ்கா விழாவுக்காகவே இயேசுவும் பன்னிரண்டு வயதில் திருக்கோவிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். இயேசுவின் பெற்றோரும் உறவினர்களும் ஒன்றாக கோவிலுக்கு இவ்விழாவினி மித்தம் சென்றார்கள்.

இயேசு உயிர்த்தெழுந்ததை சில கிறிஸ்தவர்கள் பாஸ்கா என்று கொண்டாடுவார்கள். யூத பாஸ்கா கிறிஸ்தவர்களின் பாஸ்காவினின்று வேறுபட்டது.

யூதர்களின் வரலாற்றின் முக்கியமான நிகழ்வை நினைவுகூரும் விழாதான் அவர்களின் பாஸ்கா. அதாவது இஸ்ரயேல் மக்கள் எகிப்தில் அடிமைகளாக வாழ நேரிட்டது. அப்போது அவர்கள் தமது துன்பங்களைக் கூறி இறைவனிடம் மன்றாடினார்கள். கடவுள் மோசே மூலம் அவர்களை விடுதலை செய்து கானான் தேசத்திற்கு அழைத்துச் சென்றார். இச்சம்பவத்தை நினைவுகூரும் விழாதான் பாஸ்கா விழா. யூதர்கள் ஒவ்வொருவரும் இவ் விழாவைக் கட்டாயமாகக் கொண்டாடுவார்கள். அதற்காக அவர்கள் குழுக்களாக எல்லா இடங்களில் இருந்தும் எருசலேம் கோவிலுக்கு வருவார்கள். அவ்வாறே மரியாவும் யோசேப்பும் பன்னிரண்டு வயதை அடைந்த இயேசுவும் எருசலேம் கோவிலுக்குப் போனார்கள்.

விழா கொண்டாட்டங்கள் நிறைவு பெற்றதும் மரியாவும் யோசேப்பும் தமது வீட்டுக்குச் சென்றார்கள்.

இயேசுவோ எருசலேமில் ஆலயத்தில் தங்கிவிட்டார். ஆனால் இயேசுவின் பெற்றோர் அதை அறிந்திருக்கவில்லை. அவர் தமது உறவினர்களுடன் இருப்பார் என்று கருதினார்கள். பயணம் முடிந்த பின் அவரைக் காணாது எல்லா இடங்களிலும் தேடிக்கொண்டு மீண்டும் எருசலேம் ஆலயத்துக்கு திரும்பி வந்தார்கள்.

அங்கு அவர் போதகர்கள் நடுவில் இருந்து, அவர்கள் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டும் அவர்களிடம் கேள்விகளை எழுப்பிக்கொண்டும் இருப்பதைக் கண்டார்கள். தாம் பார்த்ததையிட்டு இயேசுவின் பெற்றோர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டிருப்பார்கள்.


படம் 5.2 இயேசுவும் மரியாவும்

மகனைக் கண்ட தாய் மரியா அப்போது இயேசுவிடம் ''மகனே, ஏன் இப்படிச் செய்தாய்?''என்று கேட்டார். அதற்கு இயேசு,''நீங்கள் ஏன் என்னைத் தேடினீர்கள்? நான் எனது தந்தையின் அலுவல்களில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டார்.

பின்பு இயேசு அவர்களுடன் தமது ஊரான நாசரேத்துக்கு திரும்பிச் சென்று பெற்றோருக்கு பணிந்து நடந்தார்.

**இந்த சம்பவத்தில் இருந்து நாம் கற்றுக்கொள்ளும் பாடம் என்ன என்று பார்ப்போம்.**

* மரியாவும் யோசேப்பும் இயேசுவை தேடிக்கண்டு பிடித்தபோது இயேசு கூறியவை எமக்கு சிறந்த வழிகாட்டலாகும். ''நான் என் தந்தையின் அலுவல்களில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?'' என்பதே இயேசுவின் பதிலாக இருந்தது. (சிலதிருமறையில் ''நான் எனது தந்தையின் வீட்டில் தங்கியிருக்க வேண்டும் என்பதை அறிவீர்களா?'' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது).
கடவுளுடன் எமக்கு இருக்க வேண்டிய தொடர்பை இயேசுவின் இப்பதில் எடுத்துக்காட்டுகின்றது. கடவுளை எமது தந்தையாக நாம் கருதி எப்போதும் கடவுளுடன் தொடர்பு கொண்டு வாழ வேண்டும்.

* பெற்றோருக்குப் பணிந்து இயேசு நாசரேத்தில் வாழ்ந்தார். இறை மைந்தனான இயேசு வீட்டில் பெரியோருக்குப் பணிந்து வாழ்ந்தார். இப்பணிவு எல்லா சிறுபிள்ளைகளுக்கும் ஒரு முன்மாதிரி ஆகும். பெற்றோரை இயேசு மதித்து வாழ்ந்தார் என்பதை அவரின் பணிவு எடுத்துக் காட்டுகின்றது. எமது பெற்றோருடன் எமக்கு இருக்கும் உறவை மேலும் பலப்படுத்தி சிறுவர் நாம் வளர்ச்சி அடைவோமாக.

* இயேசு இவ்வுலகில் சிறுபிள்ளையாக வளரும் போது கடவுளாலும் மனிதர்களாலும் போற்றப்பட்டார். எல்லா வழிகளிலும் இயேசு நல்ல பிள்ளையாக காணப்பட்டார் என்பதை இது காட்டுகின்றது. இன்றைய உலகில் சிறு பிள்ளைகளுமே தாம் எதிர்நோக்கும் தடைகள், சவால்கள் என்பவற்றின் மத்தியில் நல்லபிள்ளைகளாக வளரவேண்டும் என்பதற்கான வழிகாட்டலாக இயேசுவின் நடத்தை அமைகின்றது.

***மனனவசனம்:***
***லூக்கா 2:51-52***

**பின்பு அவர் அவர்களுடன் சென்று நாசரேத்தை அடைந்து அவர்களுக்குப் பணிந்து நடந்தார். அவருடைய தாய் இந் நிகழ்ச்சிகளையெல்லாம் தமது உள்ளத்தில் பதித்து வைத்திருந்தார்.**

**இயேசு ஞானத்திலும் உடல்**
**வளர்ச்சியிலும் மிகுந்து கடவுளுக்கும் மனிதருக்கும்**
**உகந்தவராய் வாழ்ந்து வந்தார்.**

செயற்பாடு

1. 12 வயதில் இயேசு கடவுளுடனான தொடர்பை வளர்த்துக் கொண்டதுபோல் நீரும் கடவுளுடனான தொடர்பை வளர்க்கும் சந்தர்ப்பங்கள் 3 தருக.

2. ''நான் எனது தந்தையின் வீட்டில் இருக்கவேண்டும்'' என்ற இயேசுவின் கூற்றை நீர் எவ்வாறு விளங்கிக் கொள்கின்றீர்?

# 6 நமக்காக மரித்த இயேசு

இறைவனின் சாயலில் படைக்கப்பட்ட முதல் மனிதன், இறைவனுக்கு கீழ்ப்படியாமல் பாவத்திற்குட் பட்டான். பாஸ்கா தினத்தன்று ஆட்டுக் குட்டி ஒன்றைப் பலியிடுவதன் மூலம் தமது பாவத்திற்கு விமோசனம் பெறலாம் என்று யூதமதத்தில் நம்பிக்கை காணப்பட்டது. ஆட்டுக்குட்டியின் இரத்தம், தமக்கு பாவத்திலிருந்து விடுதலை தரும் என்று நம்பினார்கள். ஆனால் இயேசு, தமது இரத்தத்தை சிலுவையில் சிந்தி, மனிதருக்கு மீட்பைப் பெற்றுத்தந்தார். இதன் மூலம் இறைவனிடம் இருந்து விலகிச்சென்ற மனிதனுக்கு, மீண்டும் இறைதொடர்பு கிடைத்தது.

'பெரிய வெள்ளி' தினத்தை நினைவு கூறுவதற்காக பாடசாலை கிறிஸ்தவ மன்றத்தால் விசேட நிகழ்வு ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. மண்டபத்தின் மேசை மீது சிலுவை வைக்கப்பட்டிருந்தது. சமய பாட ஆசிரியரின் தலைமைத்துவத்துடன் நிகழ்வு ஆரம்பமாகியது.

ஆசிரியர் : இன்று இயேசு சிலுவையில் அறையப்பட்ட நிகழ்வில் எமது கண்ணோட்டத்தை செலுத்துவோம். உங்களுக்கு தெரிந்தவைகளை கூறுங்கள்.

நகோமி : எமது பாவங்களுக்காக இயேசு சிலுவையில் மரித்தார்.

சலோமி : இயேசுவின் தலையில் முள்முடி சூட்டினார்கள். கசையால் அடித்தார்கள்.

ஆசிரியர் : ஆம்! அனைவரும் சரியானதைக் கூறினீர்கள். இறைவன் தமது சாயலில் மனிதனைப் படைத்து இறைவிருப்புக்கு ஏற்ப வாழவேண்டும் என எதிர் பார்த்தார். ஆனால் அவன் அதற்கு மாறாக நடந்தான். இவ்வாறு விலகிச் சென்ற மனிதனை, மீண்டும் தம்மிடம் கொண்டுவரப் பல்வேறு முறைகளில் செயற்பட்டார். இறுதியாக, இறைமகன் இயேசுவை உலகுக்கு அனுப்பினார். அவர் மனித விடுதலைக்காகப் பல துன்பங்களை அனுபவித்தார். இயேசுவின் துன்புறும் நிகழ்வை, நாம் பெரிய வெள்ளி தினத்தில் நினைவு கூறுகின்றோம். மத்தேயு 27 : 32 - 50 வாசியுங்கள். இதில் சிலுவையில் அறையப்படுதலுடன் தொடர்புடைய பல நிகழ்வுகள் அழகாக குறிப்பிடப்பட்டுள்ளன.




''இயேசுவை சிலுவையில் அறைதல்'' தொடர்பான நிகழ்வில் எமது கண்ணோட்டத்தை செலுத்துவோம். எபிரேய மொழியில் ''கொல்கொதா'' அல்லது கபாலஸ்தலம் என்றும் பொருள்படும் மண்டையோட்டு இடத்தில் இயேசுவைச் சிலுவையில் ஆணிகளால் அறைந்தார்கள். கள்வனைப் போன்று அவரது வலது புறம் ஒருவனும் இடது புறம் ஒருவனுமாக இரு கள்வர்களைச் சிலுவையில் அறைந்தார்கள். ஆளுநர் பிலாத்துவால் ''யூதரின் அரசன்'' என குற்றம் சாட்டப்பட்டார். அன்று இடம்பெற்ற நிகழ்வு உலக வரலாற்றில் என்றும் மறக்கமுடியாத ஒன்றாகும். மத்தேயு நற்செய்தி நூலில் எழுதப்பட்டுள்ள ஒழுங்கில், துன்புறுதல் நிகழ்வுகளை நாம் இங்கு கற்போம்.



படம் 6.1 இயேசு சிலுவையை சுமந்து செல்லல்.

இயேசு சிலுவையை சுமந்து கொல்கொதாவை அடைந்தார்



படம் 6.2 சிலுவையை சுமப்பதற்கு சிரேன் ஊரைச் சேர்ந்த சீமோன் இயேசுவுக்கு உதவி செய்தல்.

இயேசுவின் சிலுவையை சுமப்பதற்கு சிரேன் ஊரைச் சேர்ந்த சீமோன் வற்புறுத்தப்பட்டான் அவன் சிலுவையை சுமந்து இயேசுவுக்கு உதவினான்.




படம் 6.3 இயேசுவின் உடைகளைப் பங்கிடுதல்

'இவர் யூதரின் அரசனாகிய இயேசு' என எழுதப்பட்ட வசனத்தை சிலுவையில் தொங்கவிட்டனர். இயேசுவின் தலையில் முள்முடியை அணிவித்தனர். இயேசுவை ஆணிகளால் அடித்த பின்னர் அவரது ஆடைகளைப் பங்கிட்டுக் கொண்டனர்.



படம் 6.4 இயேசு சிலுவையில் உயிர்நீத்தல்

அவருக்கு இரு பக்கத்திலும் இரு கள்வர்களைச் சிலுவையில் அறைந்தார்கள். அவர்களில் ஒருவன் இயேசுவை பழித்துரைத்தான். தலைமைக் குருக்களும், யூத மதத்லைவர்களும் மறைநூல் அறிஞர்களும் அவரை இகழ்ந்தனர். நண்பகல் முதல் பிற்பகல் மூன்றுமணி வரை புவியில் இருள் சூழ்ந்தது. இயேசு 'ஏலி, ஏலி லாமா சபத்தானி' என உரத்த குரலில் கூப்பிட்டார். (பொருள்: என் இறைவா! என் இறைவா! ஏன் என்னைக் கைவிட்டீர்) அன்று எதுவித குற்றங்களும் செய்யாத இயேசு துன்பங்களை அனுபவித்து சிலுவையில் உயிர் துறந்தார்.

*பாவம் செய்த மனித இனத்துக்காக அவர் மரித்தார். சிலுவையில் தொங்கிய இயேசு மனிதகுலத்தின் மன்னிப்புக்காக தந்தையிடம் வேண்டுதல் செய்தார். (லூக்கா 23:34)*

**சிலுவையில் தொங்கிய இயேசுவை கேலி செய்தவர்களின் கூற்றுக்களும் - அவற்றின் கருத்துக்களும்**

**'ஆலயத்தை இடித்து மூன்று நாட்களுக்குள்
கட்டுகிறவனே உன்னை நீயே காப்பாற்று'**

*சிலுவையில் அறையப்பட்டு மூன்றாம் நாளில் இடம் பெறவிருக்கும் உயிர்ப்பை குறித்து கூறப்பட்டது.*

***''பிறரை மீட்டான். ஆனால் தன்னை மீட்கமுடியவில்லை ''
மத் 27 : 42***

*மனுக்குலத்தை பாவத்திலிருந்து விடுதலை செய்யவே இயேசு சிலுவையில் பலியானார்.*

**''நீ இஸ்ரயேலரின் அரசனா? சிலுவையிலிருந்து இறங்கி வா.
அப்பொழுது நாங்கள் உம்மை நம்புவோம்.''
மத்தேயு 27 : 42**

*இறைமகன் என்றால் இறங்கி வா என்பதில் ''இயேசுவின் வாழ்வின் தியாகத்தால் மனிதருக்கு நிலை வாழ்வு உரித்தாகின்றது'' என விசுவாசிக்க முடிகின்றது.*

*படைத்த கடவுளுக்குக் கீழ்படியாமல், அவரது விருப்பத்துக்கு மாறாக, மனிதன் பல வேளைகளில் செயற்பட்டிருக்கிறான். இதனால் இறை மனித உறவு உடைந்துபோனது. இயேசு உடைந்துபோன உறவை மீண்டும் உருவாக்கக் கல்வாரி சிலுவையில் தன் உயிரை அர்ப்பணித்தார்.*

அனைத்து உலகுக்கும் புதிய எதிர்பார்ப்பை அளித்தார். மனிதனால் தனியாக பாவத்திலிருந்து விடுதலை பெற முடியாது. எமது பாவங் களுக்காக நாம் பெற வேண்டிய தண்டனையை அவர் ஏற்று எமக்கு மீட்பு அளித்தார்.

இயேசு, தனது பணியை வெற்றியுடன் செய்து முடித்தார். எமது விடுதலைக்காக உயிர் நீத்த இயேசுவுக்கு, நாம் நன்றி கூறுவோம். சிலுவையின் பாதத்தில் எமது குற்றங்களை நீக்கி, நாம் அவரது சொந்த பிள்ளைகளாக செயற்பட்டு வாழ்வோம்.

*மனனவசனம்*
*எசாயா* 53 *:* 6

**ஆடுகளைப் போல நாம் அனைவரும் வழிதவறி அலைந்தோம். நாம் எல்லோரும் நம் வழியே நடந்தோம். ஆண்டவரோ நம் அனைவரின் தீச்செயல்களையும் அவர் மேல் சுமத்தினார்.**

செயற்பாடு

1. இயேசுவின் சிலுவை மரணத்துடன் தொடர்புபட்ட சம்பவங்களை முறையாக எழுதுக.

# 7 உயிர்ப்பின் நற்செய்தி

**எமது பாவங்களில் இருந்து விடுதலையைப் பெற்றுத்தர, இயேசு துன்பங்களை அனுபவித்து சிலுவையில் தன் உயிரைத் தியாகம் செய்தார். மூன்றாம் நாள் அவர் உயிரோடு எழுந்து உயிருள்ள தெய்வமாக நம் மத்தியில் செயலாற்றுகின்றார். இயேசுவின் உயிர்ப்பின் நற்செய்தியை நாம் இப்பாடத்தில் கற்போம்.**

ஒய்வு நாளுக்கு பின் வாரத்தின் முதல் நாள் விடியற்காலையில் பெண்கள் கல்லறையைப் பார்க்க சென்றார்கள். அக்காலத்துப் பாரம்பரிய வழக்கப்படி உடலில் பூசுவதற்கென்று நறுமணப் பொருட்களை அவர்கள் கொண்டு சென்றனர். ஆனால் அவ்விடத்தில் எதிர்பாராத நிகழ்வு ஒன்று இடம்பெற்றது.

*மகதலா மரியா : ஆ.....ஆ....எனக்குப் பயமாக இருக்கின்றது.*

*மரியா : அதோ! ஆண்டவரின் தூதர் கல்லறை மூடியிருந்த கல்லை புரட்டி அதன் மேல் உட்கார்ந்திருக்கின்றார்.*

*மகதலா மரியா : எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. ஒளியால் என் கண்கள் மூடப்பட்டுள்ளன.*

*மரியா : எனக்கு அவர் வானதூதர் போன்று தான் தோன்று கின்றார். அவரது தோற்றம் மின்னல் போன்றும், ஆடை வெண்மையாகவும் தெரிகின்றது.*

*மகதலா மரியா : அதோ பாருங்கள்! காவல் வீரரும் நடுங்குகின்றனர்.*

| | | |
|---|---|---|
| வானதூதர் | : | நீங்கள் அஞ்சாதீர்கள். சிலுவையில் அறையப்பட்ட இயேசுவை தேடுகின்றீர்கள் என எனக்கு தெரியும். அவர் இங்கே இல்லை. அவர் கூறியபடியே உயிருடன் எழுப்பப்பட்டார். வாருங்கள்! அவரை வைத்த இடத்தை வந்து பாருங்கள். |
| மகதலா மரியா | : | என்ன? அவர் இங்கே இல்லையா? அவர் உயிர்த்து எழுந்து விட்டாரா? |
| வானதூதர் | : | நீங்கள் விரைந்து சென்று இறந்த அவர் உயிருடன் எழுப்பப்பட்டார் என சீடருக்கு சொல்லுங்கள். உங்களுக்கு முன்பாக அவர் கலிலேயாவுக்கு போய்க் கொண்டிருக்கின்றார். அங்கே நீங்கள் அவரைக் காண்பீர்கள். |
| மகதலா மரியா | : | நாங்கள் விரைவாகப் போய் சீடர்களுக்கு கூறுவோம். |
| மரியா | : | ஆமாம்! எனக்கென்றால் இது புதுமையானதொரு அனுபவம்.<br>(இந்நிகழ்வைக் கண்ட பெண்கள் அச்சமுற்றனர். அதேவேளையில் பெருமகிழ்ச்சி அடைந்தவர்களாய் உயிர்ப்பின் வெற்றிச் செய்தியை சீடருக்கு அறிவிக்க ஓடினார்கள். அவ் வேளையில்...........) |
| இயேசு | : | வாழ்க! |
| இரு பெண்கள் | : | இயேசுவா? என்ன ஆச்சரியம்! |
| மகதலா மரியா | : | இயேசுவைப் பணிந்து கொள்வோம் வாருங்கள். |
| இயேசு | : | ''அஞ்சாதீர்கள்! என் சகோதரரிடம் சென்று அவர்களை கலிலேயாவுக்குப் போகுமாறு சொல்லுங்கள். அங்கே அவர்கள் என்னைக் காண்பார்கள். |




இயேசு சிலுவையில் அறையப்பட்டதின் நிமித்தம் எதுவித எதிர்பார்ப்புக்களும் இன்றி துணிவற்று வாழ்ந்து கொண்டிருந்த மக்களுக்கு இயேசுவின் உயிர்த்தெழுதல் புத்தொளியை அளித்தது.

முதலாவதாக, உயிர்ப்பின் வெற்றியைக் கண்ட பெண்கள் ஒளியின் செய்தியை ஓடோடிச் சென்று சீடர்களுக்கு கூறினார்கள்.

இயேசுவின் உயிர்த்தெழுதலை முதன் முதலாக கண்ட பெண்களே வெற்றியின் செய்திக்கு முதல் சாட்சியாளர் ஆவர்.

**இயேசுவின் உயிர்த்தெழுதலின் செய்தியைப் பெண்கள் மூலமாகக் கேட்ட சீடர்கள் வாழ்வில் புத்தொளியைப் பெற்றனர்.**

*அது எவ்வாறு?*

உரோம பேரரசு மற்றும் பரிசேயர், சதுசேயர், மறைநூல் அறிஞர் போன்றவர்களின் ஏகாதிபத்தியத்தில் யூதர் பல துன்பங்களை அனுபவித்தனர். இவற்றிலிருந்து அவர்களை மீட்பதற்காக மெசியா எனும் மீட்பர் உலகில் உதிப்பார் என இறைவாக்கினர் இறைவாக்கு உரைத்திருந்தனர்

இதற்கேற்ப, இயேசு தம்மை விடுவிக்கும் மெசியா என யூதர்கள் எதிர்பார்த்தனர். இயேசு எருசலேமுக்கு வெற்றி ஆரவாரத்துடன் பவனி செய்த நிகழ்வில் மக்களின் வரவேற்பிலிருந்து இது தெளிவாகின்றது.

ஆனால் யூத மக்களின் எதிர்பார்ப்பிற்கு மாறாக இயேசு மண்ணுலகில் தமது பணியை நிறைவு செய்து, பல துன்பங்களை அனுபவித்து சிலுவையில் தமது உயிரை அர்ப்பணித்தார். இந்த நிகழ்வானது இயேசுவின் சீடர்களுக்கு மாத்திரமல்ல, யூத மக்களுக்கும் அனைத்து எதிர்பார்ப்புகளும் அற்று போக ஒரு காரணியாக அமைந்தது.

ஆனாலும் கல்லறைக்கு சென்ற பெண்களுக்கு கிடைத்த செய்தி ''அவர் உயிருடன் எழுப்பப்பட்டார்'' என்பதாகும். இது சீடர்களின் வாழ்வில் புதிய எதிர்பார்ப்பைக் கொடுத்தது. அவர்கள் புதுவாழ்வில் புத்தொளி பெற்றனர்.

அன்று சீடர்கள்

**''இயேசு உயிர்த்தெழுந்தார்'' என பெண்கள் சான்று பகர்ந்த வெற்றியின் செய்தியைக் கேட்ட சீடர்கள் எவ்வாறு செயற்பட்டனர்?**

இயேசு சிலுவையில் அறையப்பட்டதன் பின்னர் சீடர்கள் முன்னர் பழக்கப்பட்ட வாழ்வுக்கு மீண்டும் செல்ல முற்பட்டனர். என்றாலும் உயிர்ப்பின் ஒளியால் இயேசுவின் 'வாழும் தொனி' யாக செயற்பட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இயேசுவுடன் இணைந்து வாழ்ந்த இவர்கள் அவரது அளப்பரிய அன்பையும், தியாகவாழ்வையும் முன்னுதாரணமாகக் கொண்டு வாழ முற்பட்டனர். 'இயேசுவின் உயிர்த்தெழுதல்' எனும் செய்தி எமக்கு உரித்தாகும் நிலைவாழ்வுக்கு சான்று பகர சீடர்கள் துணிவு பெற்றனர். அதற்காக அவர்களது வாழ்வை அர்ப்பணிக்கவும் பின்வாங்கவில்லை.

இன்று நாம்

**இயேசுவின் உயிர்ப்பால்**
**புத்தொளி பெற்று வாழ்கின்றோம்.**

**இயேசு எமக்காக செய்த அர்ப்பணிப்பின் வாழ்வால் நாம்**
**பாவங்களுக்கு மன்னிப்பு பெற்றவர்களாக வாழ்கின்றோம்.**

**பாவங்களுக்கு மன்னிப்பு பெற்று இயேசுவின் உயிர்ப்பின்**
**ஊடாக நிலைவாழ்வுக்கு உரிமை பெற்றுள்ளோம்.**

**அன்று**

**''அவர் உயிருடன் எழுப்பப்பட்டார்'' என்று வானதூதர்**
**கூறிய செய்தி முதன்முதலாக பெண்களுக்கு கிடைத்தது.**
**அவர்கள் புதுப்பெலனடைந்து விரைந்து சென்று அதை**
**சீடர்களுக்கு கூறினார்கள்.**

**அப்போது**

**சீடர்கள் இயேசுவின் குரலாக மாறினர். உயிர்ப்பின் செய்திக்கு சான்று பகர்ந்து வாழ்ந்தனர்.**

**அதற்கேற்ப**

**அன்று பெண்களும் சீடர்களும் செயற்பட்டது போன்று நாமும் உயிர்ப்பின் செய்திக்கு சான்று பகர வேண்டும்.**

இயேசுவின் உயிர்ப்பின் செய்திக்கு நாம் சான்று பகர வேண்டும்.

*வாசிப்போம்:*

 லூக்கா 10 : 27
யோவான் 13 : 34
யோவான் 13 : 35
மத்தேயு 5 : 14

*மனனவசனம்:*
*மத்தேயு 28 : 19*

எனவே நீங்கள் போய் எல்லா மக்களினத்தாரையும் சீடராக்குங்கள்;தந்தை மகன், தூய ஆவியார் பெயரால் திருமுழுக்கு கொடுங்கள்

செயற்பாடு

1. கல்லறைக்கு சென்ற பெண்களுக்கு இயேசுவைக் குறித்து கிடைத்த செய்தி யாது?

2. இயேசுவின் உயிர்ப்பால் எமக்கு கிடைக்கும் விசேட வரப்பிரசாதங்கள் யாவை?

# 8 உயிர்ப்புக்கு சான்று பகர்தல்

**அளப்பரிய அன்பின் நிமித்தமாக ஆண்டவர் இயேசு எமது பாவங்களுக்காக மரணத்தை ஏற்று மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். நாம் அந்த நாளை ''பாஸ்கா'' என அழைக்கின்றோம். இது எமது வெற்றியின் நாளாகும்.**

இயேசுவின் உயிர்ப்பைக் கண்ட சீடர்களும் பெண்களும் பயமின்றிச் சான்று பகர்ந்தனர்.




மகதலா மரியாவும் யோவன்னாவும் யாக்கோபின் தாயாகிய மரியாவும் கண்ட, கேட்ட செய்தியை திருத்தூதர்களுக்கு கூறினார்கள். அவர்களால் அதை நம்ப முடியாமல் இருந்தது. உடனே பேதுரு கல்லறைக்கு ஓடிச் சென்று குனிந்து பார்த்தான். உடலை சுற்றி இருந்த துணியைக் கண்டு வியப்படைந்தான். வெறுமையான கல்லறையைக் கண்ட பேதுரு விசுவாசத்துடன் திரும்பிச் சென்றான்.



8.1 இயேசு பெண்களுக்கு காட்சியளித்தல்

கல்லறைக்குச் சென்ற பெண்களுக்கும் பேதுருவுக்கும் இயேசு காட்சியளித்தது போல் எம்மாவூருக்குச் சென்ற சீடர்களுக்கும் காட்சியளித்தார்.

எம்மாவூர் பயணம்





படம் 8.2 எம்மாவூர் பயணம்

இங்கு குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்வைப்பயிற்சி புத்தகத்தில் உரையாடலாக எழுதுங்கள்.

லூக்கா 24:17 ⟶ லூக்கா 24:18
லூக்கா 24:19 ⟶ லூக்கா 24:20-24
லூக்கா 24:25-27 ⟶ லூக்கா 24:28-29

எம்மாவூருக்கு சென்ற கிலெயோப்பாவும் மற்ற சீடனும் வழியே உரையாடிக் கொண்டு சென்றவேளையில் இயேசுவும் அவர்களுடன் நடந்து சென்றார். ஆனால் அவர்களால் இயேசுவை அறிந்து கொள்ள முடியவில்லை. கலக்கமடைந்து காணப்பட்ட சீடர்களுக்கு இறைவாக்கினரால் கூறப்பட்டிருந்த செய்திகளை இயேசு எடுத்துரைத்தார். மோசே முதல் இறைவாக்கினர் வரை அனைவரின் நூல்களிலும் தம்மைக்குறித்து எழுதப்பட்ட யாவற்றையும் அவர் அவர்களுக்கு விளக்கினார். அவர்களது உள்ளம் உருகியது. உடன் சென்ற இயேசுவை உணரவில்லை. இயேசு பந்தியில் அமர்ந்து அப்பத்தை எடுத்து கடவுளைப் போற்றி அவர்களுக்கு பிட்டு கொடுத்தார். அவ்வேளையில் அவர்களது இருள் நிறைந்த உள்ளம் ஒளியான இயேசுவை அடையாளம் கண்டது. இயேசு இறுதி திருவிருந்தில் அப்பத்தையும் திராட்சைப்பழ இரசத்தையும் வழங்கிய நிகழ்வு அவர்கள் மனதில் உதித்திருக்கலாம்.

அந்நேரமே அவர்கள் புறப்பட்டு எருசலேமுக்குத் திரும்பிப்போய் ''ஆண்டவர் உண்மையாகவே உயிருடன் எழுப்பப்பட்டார்.'' என சான்று பகரத் தொடங்கினர்.

மேலும் சீடர்கள் சிலர் பேசிக்கொண்டிருந்த போது இயேசு அவர்கள் நடுவில் தோன்றி ''உங்களுக்கு அமைதி உரித்தாகுக!'' என்று வாழ்த்தினார். அவர்கள் அமைதியும் மகிழ்வும் அடைந்தனர். சில சீடர்கள் உயிர்த்தெழுதலை நம்புவதற்கு அடையாளம் தேடினார்கள். இயேசு தமது கைகளையும் கால்களையும் காட்டி தான் இயேசு என்பதை உறுதிப்படுத்தினார்.

**இயேசுவின் சீடர்களது செயற்பாடுகளும் - உமது மனப்பாங்கு மாற்றமும்**

**உங்கள் உள்ளத்தை சோதித்து பாருங்கள் உயிரோடு இருப்பவரைக் கல்லறையில் தேடுவதேன்?**

* இயேசு தமது சீடர்களிடம் கைகளையும் கால்களையும் தொட்டு பார்த்து விசுவாசிக்குமாறு கூறினார்.

நீங்கள்

**அதே போன்று, விசுவாசக் குறைவால் பலவற்றை விசாரித்து அறிந்து மட்டுமே விசுவாசம் கொள்வீர்களா? துன்பங்கள், பிரச்சினைகள் முன்னால் அற்புதங்களும் அடையாளங்களும் தேடி அலைகின்றீர்களா?**

* எம்மாவூருக்கு சென்ற சீடர்களுக்கு இயேசு தம்மைப்பற்றி இறை வாக்கினர்களால் எழுதப்பட்ட இறைவாக்குகளை கூறியும் அவர்களால் அவற்றை அறிந்து கொள்ளமுடியவில்லை.

நீங்கள்

**இறைவார்த்தையை வாசித்து, இறை செய்திகளை கேட்டு அவற்றை அறிந்து அதற்கேற்ப வாழ்வை அமைத்துக் கொள்வதற்கு முயற்சிக்கின்றீர்களா?**

* இயேசுவின் துன்புறுதல் மரணம், உயிர்ப்பு, பணிகள் அனைத்தையும் மறந்து செயற்பட்டனர்.

நீங்கள் **இறைவார்த்தைகளின் உண்மைகளை மறந்து செயற்படுகின்றீர்களா?**

உங்களது தவறுகள் உள்ளத்தின் சிந்தனைகள் செயல்கள் அனைத்தையும் மாற்றி அமைக்கும் காலம் மலர்ந்துள்ளது.

***அன்று கலங்கி நின்ற சீடர்களுக்கு இயேசு அமைதியை வழங்கினார். இயேசுவைப் பின்பற்றும் எமக்கும் அமைதியையும் ஆறுதலையும் தந்தருள்வாராக!***

* ‘‘எனது உயிர்தெழுதலை காணாமல் நம்புவோர் பேறு பெற்றோர்’’ என இயேசு கூறியுள்ளார். எமது பலவீனம் மற்றும் பெறுமதியற்ற தன்மைகளை பாராது அவரது பிரசன்னத்தை நாம் உணரச்செய்கின்றார்.

* இயேசுவின் உயிர்ப்பால் எமக்கு நிலைவாழ்வு கிடைத்துள்ளது.

* இயேசுவின் உயிர்ப்புக்கு சான்று பகர முதலாவதாக எமது விசுவாசத்தை வளர்க்க வேண்டும். வாழ்வின் பிரச்சனைகளுக்கு முன்னால் அடையாளங்களையும் அற்புதங்களையும் தேடாது இயேசுவில் மட்டும் விசுவாசம் வைத்து வாழ வேண்டும்.

* வாழ்வில் தீர்மானம் எடுக்கும் எச்சந்தர்ப்பத்திலும் இறைவிருப்பம் என்ன என்பதை அறிந்து கொள்வோம். ஆண்டவர் இயேசுவின் போதனைகளுக்கு ஏற்ப செயற்படுவோம்.

* இயேசுவை பின்பற்றி செயற்படும்போது எதிர்நோக்கும் சவால்களைப் பொறுத்து அவருக்கு உகந்தவைகளை மட்டும் நிறைவேற்றுவோம்.

*   இயேசுவுக்கு உகந்தவர்களாய் வாழ்ந்து வாழ்வில் அவர் பிரகாசிக்க உள்ளங்களை திறந்திடுவோம்.

**விசுவாசத்தை வளர்த்து கிறிஸ்துவுக்கு சான்று பகர்வோம்.**

***மனனவசனம்:***
***1 திமொத்தேயு 2 : 6***

**அனைவரின் மீட்புக்காக அவர் தம்மையே ஈடாகத் தந்தார். குறித்த காலத்தில் அதற்குச் சான்று பகர்ந்தார்.**

செயற்பாடு

1. இயேசுவின் உயிர்ப்புக்கு சான்று பகர கிறிஸ்தவராகிய உமது வாழ்வு எவ்வாறு அமைய வேண்டும்?
2. கிறிஸ்தவ நற்செய்தியை பிறருக்கு அறிவிப்பதற்கு நீர் எடுக்கக் கூடிய மூன்று செயற்பாடுகள் எழுதுக.

# 9 நிலைவாழ்வு

**இயேசு பல துன்பங்களை அனுபவித்து சிலுவையில் அறையப்பட்டு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். அவரது உயிர்ப்புக்கு பலர் சான்று பகர்ந்தனர் என முன்னைய பாடத்தில் கற்றோம்.**

**அவரின் உயிர்ப்பு, உயிர்ப்பால் உரித்தான நிலைவாழ்வு, அதற்காக நாம் செயற்பட வேண்டிய முறைகளை இப்பாடத்தில் கற்போம்.**

ஞாயிறு வழிபாட்டின் பின்னர் வனஜா, பிரவீன், சரோஜா மூவரும் பெற்றோருடன் வீடு திரும்பினர். தாத்தாவும் பாட்டியும் வீட்டுக்கு வருவதைக் கண்டு மகிழ்வடைந்த அவர்கள் முற்றத்திற்கு சென்று வழக்கப்படி கதை கேட்க ஆயத்தமாகினர்.

வனஜா : தாத்தா! 'பாவம்' என்றால் என்ன?

தாத்தா : இறை விருப்பத்தை மீறி செயற்படுதலே பாவம் ஆகும். இதனால் எமக்கும் இறைவனுக்கும் இடையிலான தூரம் அதிகரிக்கின்றது.

பிரவீன் : தாத்தா! இறையுறவை நிரந்தரமாக்கும் வழிமுறைகள் திருவிவிலியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளனவா?

தாத்தா : ஆம்! மகனே நாம் இறைவனுக்கு கீழ்படிந்து வாழ வேண்டும். இறைகட்டளைகளை நிறைவேற்ற வேண்டும். இறைவிருப்பத்தை அறிந்து வாழ தினமும் திருவிவிலியத்தை வாசிக்க வேண்டும்.

வனஜா : முற்காலத்தில் யூதமக்கள் இறைவனுக்கு கீழ்படியாது இறைகட்டளைகளை மீறி பாவம் செய்தனர். பாவத்திலிருந்து விடுதலை பெற்று மீண்டும்

இறை உறவை ஏற்படுத்த பலிகள் ஒப்புக் கொடுத்தனர். அவர்கள் ஆட்டுக்குட்டிகளை பலி செலுத்துவது வழக்கம். ஆட்டுக்குட்டியின் இரத்தம் அவர்களது பாவங்களை கழுவுகின்றது என்பது அவர்களது நம்பிக்கையாக இருந்தது.

ஆனால், ஆண்டவர் இயேசு எம்மில் அன்பு கூர்ந்து, உடைந்துபோன மனித இறை உறவை கட்டியெழுப்பி, பாவத்திலிருந்து விடுதலை தரும் ஆட்டுக்குட்டியானார். இயேசு எமது பாவங்களுக்காக சிலுவையில் இரத்தம் சிந்தினார். எமது பாவங்களுக்கு மன்னிப்பு கிடைத்தது. இதனால் பாவத்தால் உடைந்த உறவு மீண்டும் புதுப்பிக்கப்பட்டது.

பிரவீன் : ஆம்! இயேசு எமக்காக மரித்து பாவச்சுவரை அகற்றி எமக்கு விடுதலை தந்தார். இயேசு, ஏன் துன்பங்களை அனுபவித்து மரித்தார் என்பதை நான் நன்கு புரிந்துகொண்டேன்.

சரோஜா : இயேசுவின் சிலுவை மரணத்தால் மன்னிப்பு கிடைத்தது போன்று நிலைவாழ்வின் உரிமையையும் நாம் பெற்றுள்ளோம் என இன்று அருளுரையில் கேட்டோம். அது உண்மையா? தாத்தா!

தாத்தா : ஆம், மகளே!
இயேசு மரணத்திலிருந்து உயிர்ப்பு அடைந்த நாளை கிறிஸ்தவர்கள் 'ஈஸ்டர்' அல்லது 'பாஸ்கா' என அழைக்கின்றனர். இது நிலைவாழ்வுக்குள் நாம் பிரவேசிக்கும் வழியை திறந்துள்ளது.

வனஜா : தாத்தா!
நிலைவாழ்வைப் பெற நாம் என்ன செய்ய வேண்டும் என இயேசு எமக்கு கற்று தந்துள்ளார் அல்லவா?

தாத்தா : ஆம், மகளே!

திருவிவிலியத்தில் இது குறித்து குறிப்பிடப் பட்டுள்ளது. ''மறுபடியும் பிறந்தாலன்றி எவரும் இறையாட்சியைக் காண இயலாது என மிக உறுதியாக உமக்குச் சொல்லுகிறேன்'' யோவான் 3:3 நாம் எமது தவறுகளை திருத்தி பாவத்திலிருந்து விடுபட்டு புது வாழ்வு அடைய வேண்டும் என்ற உண்மை இதிலிருந்து வெளிப்படுகின்றது.

பிரவீன் : தாத்தா!

நிலைவாழ்வை உரிமையாக்க இயேசு எமக்கு காட்டிய முன்மாதிரிகள் யாவை?

தாத்தா : ஆம், மகனே!

''உமக்குள்ள யாவற்றையும் விற்று ஏழைகளுக்கு கொடும். பின்பு வந்து என்னை பின்பற்றும்'' என இயேசு கூறினார். லூக்கா 18:18-23 இதிலிருந்து எமக்கு உரித்தான வளங்களை எமக்கு மட்டுமல்ல பிறர் நலனுக்காக பயன்படுத்த வேண்டும். முழு மனதுடன் பிறருக்கு உதவி செய்ய வேண்டும். அவை அறிவு, ஆற்றல், காலம் தொடர்பான உதவிகளாக அமையலாம். அதேபோன்று அன்பு, ஏற்றுக் கொள்ளல், இனிய சொற்கள், புரிந்து கொள்ளல், நோயாளர், விதவை, பாவிகளில் கருணை போன்ற இயேசுவின் முன்மாதிரிகளை பின்பற்றி, நிலைவாழ்வுக்கு நாமும் உரித்துடைய வர்களாகலாம்.

## நினைவிற் கொள்வோம்

*இயேசு எமது பாவங்களுக்காக சிலுவையில் தனது வாழ்வை அர்ப்பணித்தார்.*

*அதனால் எமது வாழ்வை மாற்றி அமைத்து பாவத்திலிருந்து விடுபட்டு வாழுதல் கிறிஸ்தவர்களாகிய எமது பொறுப்பாகும்.*

*நாம் எப்போதும் பிறருக்கு உதவி செய்ய ஆயத்தமாக இருக்க வேண்டும்.*

*எமது வளங்களை மட்டுமல்ல எமது ஆற்றல், காலம், இனிய சொற்கள் போன்றவற்றை பிறருடன் பகிர வேண்டும்.*

*கிறிஸ்தவராகிய எமது ஒரே எதிர்பார்ப்பான நிலை வாழ்வைப் பெற்றுக்கொள்ள இயேசுவைப் பின்பற்றுகின்றவர்களாக அர்ப்பணிப்புடன் செயல்படுவோம்.*




இந்த உலகத்தின் போக்கின்படி ஒழுகாதீர்கள். மாறாக உங்கள் உள்ளம் புதுப்பிக்கப் பெற்று மாற்றம் அடைவதாக! அப்போது கடவுளின் திருவுளம் எது எனத் தேர்ந்து தெளிவீர்கள். எது நல்லது எது உகந்தது எது நிறைவானது என்பதும் உங்களுக்குத் தெளிவாகத் தெரியும்.

உரோமையர் 12 : 2

செயற்பாடு

1. கிறிஸ்தவருக்கு உரித்தான நிலைவாழ்வை உரிமையாக்க உங்களது வாழ்வில் காணப்படவேண்டிய நற்பண்புகள் ஐந்தைக் குறிப்பிடுக.

2. உங்கள் பாவங்களுக்காக இறைவனிடம் மன்னிப்பு வேண்டி விண்ணப்பம் எழுதுக.

# 10 இயேசுவின் திருமுழுக்கு

யூதேயாவின் பெத்லகேம் ஊரில் அவதரித்த குழந்தை இயேசு கலிலேயாவிலுள்ள நாசரேத்து எனும் நகரில் வாழ்ந்து வந்தார். அவர் பன்னிரு வயது வரையில் யூத சமய பாரம்பரியங்களை பின்பற்றி இறைபயத்துடன் பெற்றோரின் அரவணைப்பில் வளர்க்கப்பட்டார்.

முப்பதாவது வயதில் நாசரேத்து நகரிலிருந்து யூதேயாவுக்கு வந்து யோர்தான் நதியில் திருமுழுக்கு பெற்று தனது பணியை ஆரம்பித்தார்.




### யோர்தான் ஆற்றில் இடம்பெற்ற நிகழ்வு என்ன?

யோர்தான் ஆற்றங்கரையில் மக்கள் வந்து கூடினர். யோவான் என்பவர் மக்கள் மத்தியில் விசேட பணி ஆற்றிக்கொண்டு இருந்தார். இவர் செக்கரியா மற்றும் எலிசபெத் என்பவர்களது புதல்வர் ஆவார். இறைவனால் ஒப்படைக்கப்பட்டிருந்த மகத்தான பணியை யோவான் செய்தார்.

அவர் இயேசுவின் பணிக்கு வழியை ஆயத்தம் செய்து, மக்களை மனம் திரும்ப அழைத்தார். யோவான் மக்களின் தீய செயல்களை எடுத்துக்கூறி அவர்களது மனதையும் செயல்களையும் மாற்றி, புதுவாழ்வை அடைவதற்கு போதனை செய்தார். அதை ஏற்றுக்கொண்ட மக்கள் புதுவாழ்வின் அடையாளமாக யோர்தான் நதியில் திருமுழுக்கு பெற்றனர். அன்று முதல் யோவான் ‘திருமுழுக்கு யோவான்’ என அழைக்கப்பட்டார்.

மக்கள் மனம்திரும்பி புதுவாழ்வுக்கு காலடி எடுத்து வைக்க வேண்டும் என்பதே யோவானின் திருமுழுக்கால் வலியுறுத்தப்பட்டது.



படம் 10.1 திருமுழுக்கு யோவான் மக்களுக்கு போதித்தல்

யூத சமூகத்தில் வாழ்ந்த சில குழுவினரிடம் நற்செயல்கள் காணப்படாத காலகட்டத்தில், குரல் கொடுத்த யோவானுக்கு, வெற்றி கரமான மறுமொழி கிடைத்தது குறிப்பிடத்தக்கது ஆகும்.

இயேசு யோவானிடம் திருமுழுக்கு பெற்று தனது பணியை ஆரம்பித்தார். மக்கள் இறைமகனை அறிந்து உண்மையாக மனம்திரும்பி வாழவேண்டும் என இயேசு விரும்பினார்.

**இயேசுவின் திருமுழுக்கு நிகழ்வை திருவிவிலியத்திலிருந்து வாசிப்போம்.**

***''அவர் ஆற்றிலிருந்து கரையேறிய உடனே வானம் பிளவுபடுவதையும் தூய ஆவி புறாவைப்போல் தம் மீது இறங்கி வருவதையும் கண்டார். அப்பொழுது ''என் அன்பார்ந்த மகன் நீயே, உன் பொருட்டு நான் பூரிப்படைகின்றேன்'' என்று வானத்திலிருந்து ஒரு குரல் ஒலித்தது.***

*மாற்கு :* 1 : 10 -11



படம் 10.2 இயேசுவின் திருமுழுக்கு

இயேசுவின் திருமுழுக்கு நிகழ்விலிருந்து வெளிப்படுவன:-

- ★ இயேசு இறைவனின் அன்பான மகன்.
- ★ தந்தையாகிய கடவுள் பூரிப்படைந்தார்.
- ★ தூய ஆவி புறா வடிவில் இறங்கியது.

இயேசு தூய ஆவியால் நிரப்பப்பட்டு, தூய ஆவியின் வழிகாட்டலுடன் பணியை ஆரம்பித்து இறைவிருப்பத்துக்கு கீழ்படிந்து, இறைமகனாக இவ்வுலகில் பணியை ஆரம்பித்தார்.

இயேசுவின் திருமுழுக்கு நிகழ்வில் தூய ஆவியை அறிந்து கொள்வோம்.

***மனனவசனம்:***
***உரோமையர் 3: 23-24***

**ஏனெனில் எல்லோருமே பாவம் செய்து கடவுள் கொடுத்த மேன்மையை இழந்து போயினர். ஆயினும் அனைவரும் கிறிஸ்து இயேசு நிறைவேற்றிய மீட்புச் செயலின் மூலம் கடவுளுடைய அருளால் இலவசமாய் அவருக்கு ஏற்புடையவர்கள் ஆக்கப்படுகின்றனர்.**

**உரோமையர் 3: 23-24**

செயற்பாடு

1) 'அ' பகுதியை 'ஆ' பகுதியுடன் இணையுங்கள்

| (அ) | (ஆ) |
|---|---|
| யோர்தான் ஆறு | யோவானின் போதனை |
| இயேசுவின் திருமுழுக்கில் புறா | இயேசு |
| மக்களின் மனம் திரும்புதல் | மக்கள் பெலனடைதல் |
| இறைவனின் அன்பான மகன் | இயேசுவின் திருமுழுக்கு |
| தூய ஆவியின் வல்லமை | தூய ஆவியின் அடையாளம் |

2) திருமுழுக்கு யோவான் தனது போதனையால், மக்களை ஆயத்தம் செய்த வழிமுறைகளைக் குறிப்பிடுக.

# 11 இறைவார்த்தை தரும் வெற்றி

ஒருநாள் பாடசாலை முடிவடைந்த பின்னர் ஆனந்தனும் இனியவனும் வீட்டை நோக்கி சென்று கொண்டிருந்தனர்.

ஆனந்தன் : அந்த மரத்தைப் பார்! கனிந்த பழங்களைப் பார்! சுவையான பழம்! இனிமையான பழம்!

இனியவன் : ஆ! என்ன அழகு! பழம் சுவையாக இருக்கும். தடியால் அடிப்போம் வா! மரத்திலிருந்து விழும் பழங்களை பொறுக்கிக் கொண்டு ஓடிவிடுவோம்.

ஆனந்தன் : சரி! சரி! வா! நானும் உதவி செய்கின்றேன்.

இனியவன் : (பழங்களுக்கு குறிவைத்து தடியை ஓங்கி அடிக்க முற்படுதல்)
முடியாது! முடியாது! என்னால் முடியாது!
நான் செய்யப்போவது தவறு.

ஆனந்தன் : என்ன? ஏதோ நினைத்த வண்ணமாக மேலே பார்த்துக் கொண்டிருக்கின்றாய்? அடிடா... அடி..... பலமாக...... அந்த கிளையில் தொங்கி கொண்டிருக்கும் பழக்குலைக்கு அடி....

இனியவன் : ஆனந்தா! என்னால் முடியாது. ஆசிரியர் அன்று ஓய்வுநாள் பாடசாலையில் கூறிய இறைவார்த்தை என்காதில் ஒலிக்கின்றது. அன்று ஆசிரியர் கற்பித்த பாடம் என் மனதில் நன்கு பதிந்துள்ளது.

ஆனந்தன் : நேற்று என்னால் ஓய்வுநாள் பாடசாலை வரமுடியவில்லை. நீ கற்ற பாடத்தை எனக்கு கூறுவாயா?

(இருவரும் திருவிவிலிய பகுதியை வாசிக்க ஆயத்தமாதல்)

இனியவன் : லூக்கா நற்செய்தி நூல் 4 : 12 இல் இயேசுவின் திருமுழுக்கின் பின்னர் இடம்பெற்ற நிகழ்வுகளை பார்ப்போம்.

ஆனந்தன் : இயேசு எங்கு சென்றார்? ஏன் சென்றார்?

இனியவன் : இயேசு தூய ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு பாலை நிலத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவர் நாற்பது நாள் அலகையினால் சோதிக்கப்பட்டார். அந் நாட்களில் அவர் ஒன்றும் சாப்பிடவில்லை. பணியை ஆரம்பிக்கும் முன்னர் இறைவேண்டுதலுடன் இறைவழி காட்டலை நாடிநின்றார். அவர் பசியுற்றார். மூன்று சோதனைகளுக்கு முகம் கொடுத்தார்.

ஆனந்தன் : **இயேசுவுக்கு ஏற்பட்ட முதலாவது சோதனை என்ன?**

இனியவன் :

| **அலகை** | **இயேசுவின் மறுமொழி** |
|---|---|
| நீர் இறைமகன் என்றால் இந்தக் கல் அப்பமாகும்படி கட்டளையிடும். லூக்கா 4 : 3 | மனிதர் அப்பத்தினால் மட்டும் வாழ்வதில்லை. லூக்கா 4 : 4 என மறை |

என மறைநூலில் எழுதியுள்ளதே என்றார்.

இயேசுவின் மறுமொழிகள் மகத்தானவை. அவர் இறை வார்த்தைகளை அறிந்திருந்தமையால் அலகையின் சோதனைக்கு இணங்கவில்லை. (இணைச்சட்டம் 8 : 3)

இறைமகனாகிய இயேசு ஒரு சொல்லால் கற்களை அப்பமாக மாற்றி இருக்கலாம். ஆனால் அவரது பணிக்கு அது பொருத்தமற்ற வழியாக இருந்தமையால் அவர் அதற்கு இடமளிக்கவில்லை.

ஆனந்தன் : **இயேசுவுக்கு ஏற்பட்ட இரண்டாவது சோதனை என்ன?**

இனியவன் :

| அலகை | இயேசுவின் மறுமொழி |
| --- | --- |
| உலகத்தின் அரசுகளை அவருக்கு நொடிப்பொழுதில் காட்டி "'நீர் என்னை வணங்கினால் அனைத்தும் உம்முடையதாகும்." லூக்கா 4 : 5 -7 | "'உன் ஆண்டவராகிய கடவுளை வணங்கி அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக!" லூக்கா 4 : 8 |

என மறைநூலில் எழுதியுள்ளதே என்றார்.

நாம் ஒரே இறைவனையே வணங்கி அவருக்கே முதலிடம் அளிக்க வேண்டும் (இணைச்சட்டம் 6 : 13)

உலக தேவைகளுக்கு அடிமையாகி அலகையை வணங்கி வாழுமாறு வேண்டினான். இயேசு எழுதப் பட்டுள்ள இறைவாக்குகள் மூலமாக மறுமொழி வழங்கினார்.

ஆனந்தன் : **இயேசுவுக்கு ஏற்பட்ட மூன்றாவது சோதனை என்ன?**

இனியவன் :

| அலகை | இயேசுவின் மறுமொழி |
| --- | --- |
| "'நீர் இறை மகன் என்றால் இங்கிருந்து கீழே குதியும். உம்மைப் பாதுகாக்கும்படி கடவுள் தூதருக்கு உம்மைக் குறித்து கட்டளையிடுவார். உமது கால் கல்லில் மோதாதபடி அவர்கள் தங்கள் கைகளால் உம்மைத் தாங்கிக் கொள்வார்கள்" லூக்கா 4:9- 11 | "'உன் கடவுளாகிய ஆண்டவரை சோதிக்க வேண்டாம்." லூக்கா 4 : 12 |

இது அதிகாரத்தை காட்டும் சோதனை பலம்வாய்ந்த சோதனை. இயேசு இறை வார்த்தையால் சோதனையை வெற்றி கொண்டார். **(இணைச்சட்டம் 6: 16)**

ஆனந்தன் : *நீ ஏன் மாம்பழக் குலைகளை பார்த்துக்கொண்டிருந்தாய் என்று எனக்கு புரிந்தது. ஆசிரியர் கூறிய வார்த்தைகள் உன் நினைவுக்கு வந்துள்ளன. தூய ஆவியானவரே உன்னை வழிநடத்தினார் என அறிந்து கொண்டேன். அழகான அறிவுரைகளை எனக்கு புரியவைத்த உனக்கு என் நன்றிகள்! நாம் நற்செயல்களை செய்வதற்கு தூய ஆவியானவரின் வழிகாட்டுதல் எமக்கு கிடைக்கின்றது என்பதை நன்கு புரிந்து கொண்டேன்.*

இனியவன் : *சரி வா, போகலாம்.*

*மனனவசனம்:*
***எபேசியர் 6:17-18***

**எல்லா வேண்டல்களையும் மன்றாட்டுக்களையும் இறைவனிடம் எழுப்புங்கள். எப்போதும் தூய ஆவியின் துணை கொண்டு வேண்டுதல் செய்யுங்கள். இதில் உறுதியாய் நிலைத்திருந்து விழிப்பாயிருங்கள். இறை மக்கள் அனைவருக்காகவும் மன்றாடுங்கள்.**
**எபேசியர் 6 : - 18**

செயற்பாடு

1. சோதனைகளின் போது இயேசு கூறிய பதில்களை பழைய ஏற்பாட்டிலிருந்து தேடி எழுதுக.

2. இயேசு கற்றுக்கொடுத்த இறைவேண்டுதலில் சோதனைகளிலிருந்து விடுபடுதல் எவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது?

# 12 கிறிஸ்தவ மறை பரவுதல்

இயேசு உயிர்த்தெழுந்து பலருக்கு காட்சியளித்த சம்பவங்களை பற்றி முன்னைய பாடங்களில் நீங்கள் அறிந்திருப்பீர்கள் இயேசு உயிர்த்தெழுந்து நாற்பது நாட்களுக்குப் பின் பெத்தானியாவில் ஓர் மலையின்மேல் விண்ணேற்றம் அடைந்தார். அவ்வேளையில் அவர் சீடர்களுக்கு தூய ஆவியானவரை அனுப்புவதாக மிகவும் தெளிவாக வாக்குறுதி அளித்தார் இதனால் பெற்ற வழிகாட்டலின் மூலம் எருசலேம், யூதேயா, சமாரியா முழுவதிலும் உலகின் கடைசி எல்லை வரைக்கும் எனக்கு சாட்சிகளாய் இருப்பீர்கள் என்றார்.




**இயேசு கூறிய இவ்வாக்குறுதி நிறைவேறியது என்பது உங்களுக்குத் தெரியுமா?**

அவர் கூறியவாறு பத்து நாட்களின் பின் யூதர்களின் பெந்தக் கோஸ்து பண்டிகையின் நாளாக இருந்தது. சீடர்கள் தூய ஆவியானவரின் வல்லமையை அனுபவித்தனர். அவ்வேளை யில் இருந்து கடவுளின் திட்டப்படி அவர்கள் நற்செய்தியை அறிவித்து வல்லமையாக இயேசுவுக்கு சான்று பகர்ந்தனர்.

இன்றைய பாடத்தில் நற்செய்திப் பணியானது சமாரியா வரை எடுத்துச்செல்லப்பட்ட முறையை நாம் கற்றுக்கொள்வோம். இவ்வாறான ஒரு சிரமமான பணியில் பிலிப்பு என்பவர் பங்களித்த முறையை கீழே உள்ள மடலை வாசித்து எமக்கு விளங்கிக் கொள்ள முடியும்.



## வாசிப்போம்
## தி.ப.8: 26 - 40

**அன்பான சகோதர / சகோதரிகளே,**

*எனது பெயர் பிலிப்பு. நான் கிரேக்க மொழியைப் பேசும் ஒரு யூதன். நான் இயேசுவைப் பின்பற்றிய ஒருவராக இருந்தேன். இயேசு விண்ணேற்றம் அடைந்து பத்து நாட்களுக்குப் பின் சீடர்களோடு அவரைப் பின்பற்றிய அனைவரும் மேல்அறையில் இறைவனை வேண்டிக் கொண்டிருந்தபோது தூய ஆவியின் வல்லமையால் பெலன்கொண்டு துணிவு பெற்றோம். அவர் கூறியவாறு நாம் அனைவரும் நற்செய்தியை ஏற்றுக்கொண்டு பயமின்றி தூய ஆவியால் நிறைந்து செயல்பட்டோம். சீமோன் பேதுரு என்பவர் திருச்சபையின் தலைவராக இருந்தார். கிரேக்க மொழி பேசும் யூதர்களின் கைம்பெண்களுக்கு அன்றாட பந்திப் (உணவு) பகிர்ந்தளிப்பதற்காக திருத்தொண்டர்களாக ஏழுபேரை தெரிவு செய்து நியமித்தனர். அவர்களில் ஒருவராக நானும் தெரிவு செய்யப்பட்டேன்.*

*ஸ்தேவான் என்பவர் எங்களின் தலைவனாக இருந்தார். அவர் மிகவும் வல்லமையாக நற்செய்தி பணியில் ஈடுபட்டபடியால் சில யூதர்கள் பொறாமை கொண்டு அவரைக் கல்லெறிந்து கொலை செய் தார்கள். ஸ்தேவானின் மரணத்தின் பின் கடவுளைப் பின்பற்றிய மக்கள் அனைவரும் வெவ்வேறு இடங்களுக்குச் சிதறிச் சென்ற போது சென்ற இடமெல்லாம் நற்செய்தியை அறிவித்து வந்தனர் தூய ஆவியார் என்னை சமாரியாவிற்கு அழைத்துச் சென்றார். அன்று யூதர்களுக்கும் சமாரியருக்கும் இடையே நட்புறவு இருக்கவில்லை. நான் யூதனாக இருந்தாலும் தூய ஆவியார் என்னைப் பெலப்படுத்தி சமாரியப் பகுதியில் இறைபணியில் ஈடுபடுத்தினார்.*

*பிற இனத்தவராக கணிக்கப்பட்ட சமாரிய மக்கள் ஆண்டவரின் நற்செய்தியை ஏற்றுக்கொண்டனர். நோயாளர்கள், முடக்குவாதமுற்றோர், கால் ஊனமுற்றோர் பலரும் குணம் பெற்றனர். தீய ஆவிகளைக்கூட வெளியேற்றுவதற்கு தூயஆவியானவர் எனக்கு உதவி செய்தார்.*

நற்செய்தியை ஏற்றுக்கொண்ட அனைவரும் திருமுழுக்கு பெற்றனர். சமாரியா நகரில் பெரும் மகிழ்ச்சி நிலவியது. பேதுருவும், யோவானும் சமாரியாவிற்கு சென்று அம் மக்களுக்காக இறைவனிடம் வேண்டியபோது அவர்கள் தூய ஆவியின் கொடையைப் பெற்றுக் கொண்டனர்.

அதன் பின் ஆண்டவரின் தூதன் என்னோடு பேசி எருசலேமில் இருந்து காசா நோக்கி செல்லும் பாதைக்கு போகும்படி கூறினார். தூதனின் வார்த்தைக்கு கீழ்படிந்து அப்பாதைக்கு சென்றேன்.

ஆச்சரியம்! ஒரு பாலை நிலப் பாதையில் தேரில் அமர்ந்து பயணம் செய்யும் ஒரு மனிதனை நான் கண்டேன். தூய ஆவியானவர் அந்தத் தேரை நெருங்கிச் செல்லுமாறு எனக்கு வழிகாட்டினார். தேரில் வந்தவர் தன் கையில் ஒரு மறைநூலை வைத்து உரத்து வாசித்துக் கொண்டிருந்தார்.

**இதோ பாருங்கள்! அவர் வாசித்த எசாயா நூலின் ஒரு பகுதி.**

''அடிப்பதற்கு இழுத்துச் செல்லப்பட்ட
ஆட்டுக்குட்டிபோலும் உரோமம்
கத்தரிப்போன் முன்னிலையில்
கத்தாத செம்மறிபோலும்
அவர் தம் வாயைத் திறவாதிருந்தார்.
தாழ்வுற்ற நிலையில் அவருக்கு
நீதி வழங்கப்படவில்லை.
மண்ணுலகில்
இவற்றை அகற்றி, மக்களின்
பாவங்களுக்காக
மரணத்தை ஏற்றார்.''

எசாயா 53:7-8

இந்த வார்த்தையைக் கேட்டபோது அவருடன் பேசுவதற்கு தூய ஆவியானவர் என்னை ஈடுபடுத்தினார். நான் தேரின் அருகில் ஓடிப்போய் அவர் வாசிப்பது விளங்குகின்றதா எனக் கேட்டேன். (''யாராவது விளக்கிக்கூறாவிட்டால் எவ்வாறு என்னால் விளங்கிக் கொள்ள முடியும்?) எனக் கூறினார்.



படம் 12:1 காசாவுக்கு செல்லும் வழியில் பிலிப்பும் எத்தியோப்பிய அரச அலுவலரும்.

தேரில் ஏறி தன்னோடு அமருமாறு என்னை அழைத்தார். தூய ஆவியின் வழிகாட்டலின் மூலம் அந்த அழைப்பை ஏற்ற நான் தேரில் ஏறி அவர் அருகில் அமர்ந்துகொண்டேன். அவரால் விளங்கிக் கொள்ள முடியாத மறைநூல் பகுதியை என்னிடம் தந்தார். அது துன்புறும் பணியாளன் பற்றிய இறைவாக்காகும். அது இயேசுவின் பாடு, மரணம், உயிர்ப்பு மூலமாக பூரணமடைந்தது. அவை அனைத்தையும் நான் அவருக்கு விளக்கிக் கூறியபோது அவர் அதை முழுமையாக ஏற்றுக்கொண்டார். தேரில் போய்க்கொண்டிருந்தபோது வழியில் தண்ணீர் இருந்த ஓர் இடத்தைக் கண்டு அவர் என்னிடம் திருமுழுக்கு பெறவேண்டும் எனக் கூறினார். ''நீர் இயேசுவை ஏற்றுக்கொள்கிறீரா? என நான் கேட்டபோது, அவர் மகிழ்வோடு, ஆண்டவர் கடவுளின் குமாரன் என்பதை விசுவாசிக் கிறேன் எனக் கூறினார். நான் அவ்வேளையிலே அவருக்கு திருமுழுக்கு கொடுத்தேன். அவருக்குள் தூய ஆவியானவர் செயல்படுவதை அவரின்

முகப்பிரகாசத்தினால் அறிந்துகொண்டேன். நற்செய்தியை ஏற்றுக்கொண்ட மகிழ்வோடு தேரில் ஏறி எத்தியோப்பியா நோக்கி பயணமானார்.

**இந்த மனிதன் யார் என்பதை அறிந்துகொள்ள நீங்களும் ஆவலாய் இருப்பீர்கள் அல்லவா?**

அவர் எத்தியோப்பிய நாட்டின் அரசியான கந்தகியின் நிதி அமைச்சர். அவர் வழிபாட்டுக்காக எருசலேம் சென்று மீண்டும் தனது ஊரை நோக்கி பயணம் செய்து கொண்டிருந்தபோதே நான் அவரை சந்தித்தேன். சமாரியரைப்போன்று ஒதுக்கப்பட்ட மக்களுக்கும் அரச அலுவலருக்கும் நற்செய்தியை அறிவிப்பதற்கு தூய ஆவியானவர் எனக்கு வழிகாட்டியதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன். நற்செய்தியானது யூதர்களுக்கு மட்டுமல்ல அனைத்து இனங்களுக்கும் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்பதே கடவுளின் திட்டமாகும்.

இப்படிக்கு,<br>
உங்கள் அன்பின்<br>
**திருத்தொண்டர் பிலிப்பு**

திருத்தொண்டர் பிலிப்பு தூய ஆவியானவரின் வழிகாட்டலின் மூலமாக மகிழ்வோடு வல்லமையாக செயல்பட்டார். அதைப்போன்று இன்று நாம் கற்றுக்கொண்ட பாடத்தின் மூலம் எமக்கும் ஓர் நல்ல செய்தி கிடைத்திருக்கின்றது. இந்த சிறப்பான நற்செய்திப் பணியை பிறருக்கு வெளிப்படுத்த இறைவன் எமக்கு பொறுப்பைக் கொடுத்திருக்கிறார். நாமும் அப் பணியைச் செயற்படுத்தி முன்னோக்கிச் செல்வோம். தூய ஆவியார் தனது வல்லமையின் மூலம் எம்மையும் அதற்காக ஈடுபடுத்துவார் என்பது உறுதி.

**மனனவசனம் :**<br>
**ரோமர் 15:13**

**எதிர்நோக்கைத் தரும் கடவுள், நம்பிக்கையால் உண்டாகும் பெருமகிழ்ச்சியாலும், அமைதியாலும் உங்களை நிரப்புவாராக! அவ்வாறு தூய ஆவியின் வல்லமையால் நீங்கள் இன்னும் மிகுதியான எதிர்நோக்குடன் வாழ அருள்புரிவாராக!**

செயற்பாடு

1. தூய ஆவியாரின் வழிகாட்டலினூடாக பிலிப்பு எவ்வாறு செயல்பட்டார்?

2. இயேசுவின் போதனையொன்றை கிறிஸ்தவன் அல்லாத உமது நண்பனுக்கு விளக்குவதற்கு புதிய ஏற்பாட்டில் நீர் தெரிவு செய்யும் பகுதியை எழுதுங்கள்.

# 13 அன்பின் சிறப்பு

நல்லதோர் கிறிஸ்தவனாவதற்கு எம்மிடம் இருக்க வேண்டிய இரண்டு விசேட குணாதிசயங்களை நாம் அறிந்துள்ளோம். அதாவது இறைவனில் கொண்டிருக்க வேண்டிய அன்பும் நம்பிக்கையும், அவ்வாறே இறைவனுக்கும் அயலானுக்கும் இடையே காண்பிக்க வேண்டிய அன்புமாகும். அவற்றினூடாக அன்பின் சிறப்பை இயேசு வெளிப்படுத்திய முறையை இப்பாடத்தினூடாக அறிந்து கொள்வோம்.



**வாசிப்போம்**
**லூக்கா 10 : 25-37**

முத்தைப்போல் பெறுமதியானது,
சமுத்திரத்தைப்போல் முடிவில்லாதது
கிறிஸ்தவ வாழ்வை மெருகூட்டுவது
எந்நாளும் சிறந்த குணவியல்பிது

**இக்குணாதிசயம் என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா?**

அன்பு என்னும் சிறப்பான குணாதிசயம். இது கிறிஸ்தவர்களான நாம் நம்மில் அன்புகூர்வதுபோல் பிறரிலும் அன்பு கூர்வதாகும். இது கடவுளின் எதிர்பார்ப்பாகும்.

**கிறிஸ்தவராக பிறரில் அன்பை வெளிப்படுத்தக்கூடிய நல்ல வழி என்ன?**

இயேசு இதைப்பற்றி விளக்கமளிப்பதற்காக ஓர் உவமையைப் பயன்படுத்தினார். இயேசுவைச் சோதித்துப் பார்ப்பதற்கு வந்த திருச்சட்ட அறிஞருக்கு பதில் அளிப்பதற்காகவே இயேசு நல்லசமாரியான் உவமையைக் கூறினார்.

***இயேசுவுக்கும், திருச்சட்ட அறிஞருக்கும் இடையிலான ஒரு உரையாடல்:***

*திருச்சட்ட அறிஞர் : ''போதகரே, நிலைவாழ்வை உரிமையாக்கிக் கொள்ள நான் என்ன செய்ய வேண்டும்?''*

*இயேசு : ''திருச்சட்ட நூலில் என்ன எழுதியிருக்கிறது. அதில் நீர் என்ன வாசிக்கின்றீர்?''*

*திருச்சட்ட அறிஞர் : ''உன் முழு இருதயத்தோடும், முழு உள்ளத்தோடும், முழு ஆற்றலோடும் முழு மனதோடும் உன் கடவுளாகிய ஆண்டவரிடம் அன்பு கூர்வாயாக. உன் மீது அன்பு கூர்வது போல் உனக்கு அடுத்திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக.''*

*இயேசு : ''சரியாய்ச் சொன்னீர். அப்படியே செய்யும். அப்பொழுது வாழ்வீர்''*

***திருச்சட்ட அறிஞர் தம்மை நேர்மையாளர் எனக்காட்ட விரும்பினார்.***

*திருச்சட்ட அறிஞர் : **யார் என் அயலான்? யார் எனக்கு அடுத்திருப்பவர்?***

*திருச்சட்டம் என்ன என்பதை அறிந்திருந்த அவர் அதன் சரியான விளக்கத்தை உணர்ந்து கொள்ளவில்லை. எனவே இயேசு அவருக்கு அன்பின் சிறப்பைப் பற்றி சிறந்ததொரு கருத்தை உணர்த்த நல்ல சமாரியர் உவமையைக் கூறினார்.*

### *உவமையின் பின்னணி*

***யூதர்களுக்கும் சமாரியருக்கும் இடையே நீண்ட காலமாக நிலைகொண்டிருந்த பிரிவினையை இயேசு விரும்பவில்லை.***

யூதன் ஒருவர் எருசலேமிலிருந்து எரிகோவுக்குப் போகும் போது கள்வர் கையில் அகப்பட்டு துன்பத் துக்கு உள்ளானார்.

கள்வர் அவருடைய ஆடைகளை உரிந்துகொண்டு அவரை அடித்துக் குற்றுயிராக விட்டுப் போனார்கள். அடிபட்ட மனிதன் வேதனையில் வாடுகின்றான். யார் வந்து உதவி செய்வாரோ?



படம் 13.1 யூதன் கள்வர்களால் தாக்கப்படுதல்

## யூத குரு - திருக்கோவிலில் குருத்துவப்பணி செய்வோர்

குரு ஒருவர் தற்செயலாக அவ்வழியே வருகிறார்.விழுந்து கிடந்த மனிதனைக் காண்கிறார், மறுபக்கமாக விலகிச் செல்கின்றார், அவனுக்கு உதவுவோர் யாருமில்லை!



படம் 13.2
குருவும், லேவியும் விழுந்து கிடந்த மனிதனைக் கண்டு விலகிச் செல்லல்

## லேவி கோத்திரம் - திருக்கோவிலில் வழிபாட்டுப் பணி செய்வோர்

லேவியர் ஒருவர் அவ்வழி வருகிறார்.
விழுந்த மனிதனைக் காண்கிறார்.
அவரும் மறுபக்கம் விலகிச் செல்கிறார்.
அவனுக்கு உதவுவோர் யாருமில்லை

***சமாரியர்*** - யூதர்கள் பாபிலோனியாவுக்கு நாடு கடத்தப்பட்டபின் சமாரியாவில் குடியமர்ந்த யூதர்கள் இவர்கள் பாபிலோனி யாவிலிருந்து திரும்பி வந்த யூதர்களால் வெறுத்து ஒதுக்கப்பட்டனர்.

சமாரியர் ஒருவர் அவ்வழி வருகிறார் விழுந்த மனிதனைக் கண்டு அவன் அருகில் செல்கிறார் அவன் மீது பரிவு கொள்கிறார் உடனடியாக உதவி செய்கிறார்.



படம் 13.3
சாமாரியன் யூதனுக்கு உதவி செய்தல்



படம் 13.4
சமாரியன் யூதனை சாவடிக்கு அழைத்துச் செல்லல்

காயங்களில் திராட்சைரசமும் எண்ணெயும் வார்க்கிறார். கழுதையின் மீது அவனை ஏற்றுகிறார். சாவடிக்கு அவனைக் கொண்டு செல்கிறார். அன்போடு அவனைப் பராமரிக் கிறார்.

சாவடி பொறுப்பாளாரிடம் செல்கிறார் இரு தெனாரியத்தை அவரிடம் கொடுக் கிறார். மனிதனை அவனிடம் ஒப்படைக் கிறார். ''திரும்பி வரும்போது மேலதிக காசைத் தருவேன்'' என்கிறார்.



படம் 13.5
சமாரியன் யூதனை சாவடியில் ஒப்படைக்கிறார்

இயேசு : *கள்வர் கையில் அகப்பட்டவருக்கு இம் மூவருள் எவர் அடுத்திருப்பவர் என உமக்கு தோன்றுகிறது?*

திருச்சட்ட அறிஞர் : *அவருக்கு இரக்கம் காட்டியவரே.*

இயேசு : *''நீரும் போய் அப்படியே செய்யும்''*

*அன்பையும் இரக்கத்தையும் அனைவருக்கும் காண்பிப்போம் அன்பு நிறைந்த வாழ்க்கை வாழ்ந்து அன்பின் சிறப்பை உலகத்துக்குக் காண்பிப்போம்.*

**கடவுளுக்கும்**
**அடுத்திருப்பவருக்கும் அன்பு**
**கூர்வதற்கு**
**எம்மையே நாம் அர்ப்பணித்து, செலவழித்து**
**அன்பைச் செயற்பாட்டால் எடுத்துக் காட்டுவோம்.**
**அதற்காக இயேசு நமக்கு வழி காட்டுகிறார்.**
**பசியாய் இருப்போருக்கு உணவளித்து,**
**தாகமாய் இருப்போரின் தாகம் தணித்து,**
**அந்நியரை ஏற்றுக்கொண்டு,**
**ஆடையின்றி இருப்போருக்கு ஆடையளித்து,**
**நோயில் இருப்போரை பராமரித்து,**
**சிறையில் இருப்போரை தேடிச்சென்று**
**அன்பைச் செயற்பாட்டால்**
**வெளிப்படுத்துவோம்!**

இதற்காக

***நல்ல சமாரியன் வழிகாட்டலையும் முன்மாதிரியையும் பெற்ற நாம்***

* தராதரம் பாராது அனைவரிடமும் நிலையான அன்பை செலுத்துவோம்.

* எமக்கு இருக்கும் செல்வத்தை பிறரின் தேவை அறிந்து கொடுத்து உதவுவோம்.

* எப்போதும் அன்பினால் பிறரின் வாழ்வைக் கட்டியெழுப்புவதற்காக எம்மை அர்ப்பணிப்போம்.

* கைம்மாறு கருதாது உதவி தேவைப்படுவோருக்கு உதவுவோம்.

இந்த அன்பை மேலும் அர்த்தமுள்ளதாக்குவதற்கு இயேசுவின் அன்பின் சிறப்பை முன்மாதிரியாகக்கொண்டு செயற்படுவோம்.

***அவர்,***
***தராதரம் பாராது அனைவரையும்***
***ஏற்றுக்கொண்டு***
***உதவி தேவைப்படுவோருக்கு***
***உதவி செய்து***
***பகைவரையும் மன்னித்து***
***அனைவருக்காகவும் சிலுவையில் மரித்து***
***அன்பின் சிறப்பை வெளிப்படுத்தினார்***

***எனவே நாமும் கிறிஸ்தவர்களாக,***

கடவுளுக்கு முதலிடம்
அளித்து நித்தமும்
அவரில் அன்பு
செலுத்வோம்

பிறருக்கு அன்பு
காட்டும் முகமாக
அவர்களுக்காக
எம்மை முழுமையாக
அர்ப்பணிப்போம்

**அதன் மூலம்**

கடவுளின் அன்பிற்கு சான்று பகர்வோம்.




**"உன் முழு இதயத்தோடும், முழு உள்ளத்தோடும், முழு ஆற்றலோடும் முழு மனத்தோடும், உன் கடவுளாகிய ஆண்டவரிடம் அன்பு கூர்வாயாக. உன்மீது நீ அன்பு கூர்வது போல் உனக்கு அடுத்திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக."**

செயற்பாடு

கீழே உள்ள வெற்றிடங்களைப் பூரணப்படுத்துவோம்.



**இடமிருந்து வலம்**

01) இயேசுவை சோதித்துப் பார்க்கும்படி இயேசுவிடம் வந்தவர்.......

02) இயேசு அவரின் வினாவிற்கு ............... கதை மூலம் பதில் அளித்தார் (வலமிருந்து இடம்)

03) வழியில் விழுந்து கிடந்த மனிதனைக் கண்டும் காணாததுபோல் ............. விலகிச் சென்றார்.

04) வழிப்போக்கன் ......... கையில் அகப்பட்டு காயமடைந்து விழுந்து கிடந்தான்.

05) விழுந்து கிடந்த மனிதனை .......... பொறுப்பாளரிடம் ஒப்படைத்தார்.

06) வழிப்போக்கன் எருசலேமில் இருந்து .............நோக்கிச் சென்றார்

07) அவ்வழி வந்தவர்களில் அவர்மீது அதிகம் .......... காட்டியவர் யார் என இயேசு கேட்டார்.

08) ஏனெனில் அவன் விழுந்து கிடந்த மனிதனைக் கண்டு அவன்மீது ..............கொண்டு அவனருகில் சென்று காயம் கட்டினார்.

**மேலிருந்து கீழ்**

09) வழிப்போக்கன் ............. இருந்து எரிகோ நோக்கிச் சென்றார்.

10) கள்வர் கையில் அகப்பட்ட மனிதனுக்கு உதவி செய்தவர் .......... ஆவார்.

07) சாவடி பொறுப்பாளாரிடம் ............ தெனாரியம் காசைக் கொடுத்தார்.

12) நாம் எமக்கடுத்திருப்பவர்களை ................ செய்யவேண்டும்.

13) திருச்சட்ட அறிஞர் தன்னை ............. என இயேசுவிடம் காட்ட விரும்பினார்.

14) விழுந்து கிடந்த மனிதனின் அருகில் முதன் முதலில் வந்தவர் .......... ஒருவர் ஆவார்.

15) இயேசு திருச்சட்ட அறிஞரைப் பார்த்து ‘‘நீயும் போய் ..........செய்’’ என்றார்.

# 14 நம்பிக்கையில் உறுதி

கிறிஸ்தவரின் வாழ்க்கையில் இருக்கவேண்டியது நம்பிக்கை, அன்பு ஆகிய இரு சிறந்த குணவியல்புகளாகும் என்பதை அறிந்து கொள்வோம். கிறிஸ்தவ அன்பு எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை கடந்த பாடங்களில் கற்றோம். இப்பாடத்தின் மூலம் கிறிஸ்தவர்களாகிய எம்மிடம் இருக்க வேண்டிய நம்பிக்கையை உறுதியாக வளர்ச்சியடைய செய்யத் தேவையான அனுபவங்களைப் பெற்றுக்கொள்வோம்.




அம்மாவும் நானும் வழமைபோல் எரிகோவில் வசிக்கும் தாத்தா பாட்டியைப் பார்ப்பதற்காக வீட்டிலிருந்து சென்றோம். வழக்கமாக நாங்கள் வரும்வரை அவர்கள் எங்களை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டு இருப்பார்கள். ஆனால் மற்றைய நாட்களைப் போல் அல் லாமல், இன்று வழி எல்லாம் ஒரே பரபரப்பாக இருந்தது. பாதையின் இரு பக்கமும் மக்கள் நிரம்பி நின்று யாரோ ஒரு புதியவரை எதிர்பார்த்து காத்திருந்தார்கள் என்பதனை உணர்ந்தேன்.

''அம்மா இந்த பரபரப்பு எதற்கு? நாம் சற்று நின்று பார்ப்போம்'' என அம்மாவிடம் கூறினேன். எல்லா இடங்களிலும் மக்கள் நிரம்பி இருந்தனர். நாங்கள் நிற்பதற்குக்கூட இடம் இல்லை.''மகனே இந்த மக்கள் இயேசு வரும்வரை வழியின் இருபக்கமும் நின்று பார்த் துக்கொண்டு இருக்கின்றார்கள்.'' என அம்மா கூறினார்கள். நான் மிகுந்த ஆவலோடு அந்தப்பக்கம் பார்த்துக்கொண்டிருந்தேன். அதோ! இயேசு சீடர்களோடு வருகின்றார். என் மனதில் புதுமையான ஒரு மகிழ்வு. அதை வார்த்தைகளால் விளக்கமுடியாது. இயேசுவைப் பற்றியும், அவர்

செய்யும் புதுமையான செயல்களைப்பற்றியும் மட்டுமே கேள்விப் பட்டிருந்தேன். ஒரு நாளும் அவர் யார்? எப்படிப்பட்டவர்? என்பதை நான் அறிந்திருக்கவில்லை. இருப்பினும் இன்று புதுமையான சந்தர்ப்பம். அவரை வரவேற்பதற்காக மக்கள் ஓடிச்சென்றனர். பார்வை இழந்த ஒரு தாத்தா, பாதையோரம் அமர்ந்திருந்து அப்பாதையில் செல்வோரிடம் உதவி கேட்டுக் கொண்டிருந்தார்.

இந்த பார்வையற்ற தாத்தாவின் பெயர் பர்த்திமேயு என அம்மா ஒருநாள் கூறினார்கள். இவர் திமேயு என்பவரின் மகன் என பாட்டியம்மா கூறினார். எப்படி இருந்தாலும் இவர் மிகவும் ஏழையாக இருந்தார்.

''அதோ! நாசரேத்து இயேசு வருகிறார்'' என அவர் வரும்வழியைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர் தாத்தாவிடம் கூறினார். தாத்தா உடனடியாக பதற்றமடைந்தார். ''தாவீதின் மகனே! எனக்கிரங்கும்'' என மிகவும் பெரிதாகச் சத்தமிட்டார். ''தயவுசெய்து சத்தத்தை நிறுத் துங்கள்'' என அங்கிருந்தோர் தாத்தாவை அதட்டினார்கள். இருப்பினும் பார்வையற்ற பர்த்திமேயு தாத்தா அதை நிறுத்தவேயில்லை. ''தாவீதின் மகனே,எனக்கிரங்கும்.'' என இன்னுமின்னும் உரக்கக்கத்தினார்!

''மகனே! அதோ இயேசு ஏதோ கூறுகின்றார். நாம் இன்னும் அருகில் செல்வோம்'' என் அம்மா என்னையும் பிடித்துக்கொண்டு பார்வையற்ற தாத்தாவின் அருகில் அழைத்துச்சென்றார். அப்போது நடப்பவைகளை தெளிவாகப் பார்க்கக்கூடியதாக இருந்தது. இயேசு அருகில் இருந்தவரைப் பார்த்து அவரைக் கூப்பிடுங்கள் என்றார். அவர் '' துணிவுடன் எழுந்து வாரும் இயேசு உம்மைக் கூப்பிடுகிறார்.'' எனக்கூறி தாத்தா எழுந்து வருவதற்கு உதவிசெய்தார். ''அதோ பாருங்கள் அம்மா அந்தத் தாத்தா மேலுடையை எறிந்து விட்டு குதித்தெழுந்து ஓடுவதை.......''
''ஆம் மகனே அதோ பார், தாத்தாவின் முகத்தில் இருக்கும் சந்தோசத்தை பார்வையற்று இருந்தாலும் புதுமையான ஓர் உணர்வும் தெளிவும் அவர் முகத்தில் தோன்றியது'' என அம்மா கூறினார்.

இயேசு அவரைப்பார்த்து ''உமக்கு நான் என்ன செய்யவேண்டும் என விரும்புகிறீர்? எனக்கேட்டார். அதற்கு தாத்தா ''ஆண்டவரே நான் பார்வை பெற வேண்டும் என்றார். அதற்கு அவர் ''உமது நம்பிக்கை உம்மை நலமாக்கிற்று''

என்று கூறியவுடன் தாத்தா பார்வை பெற்றார். ஆண்டவரின் வல்லமை மிகவும் புதுமையானது. அம்மா, இது புதுமையான அற்புதம், அங்கே பாருங்கள் தாத்தா பார்வைபெற்று மிகவும் சந்தோஷப்படுகிறார்.

பர்த்திமேயு தாத்தா அன்றுமுதல் வழியில் அமர்ந்து உதவி கேட்பதை நிறுத்தி இயேசுவைப் பின் தொடர்ந்தார். அனைவரும் ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். உண்மையாகவே இது ஒரு கனவு நிறைவேறியது போன்றது. ''ஆம், நம்பிக்கையினால் கனவு நிஜமாகும்''. ''அம்மா இது நம்பிக்கையின் புதுமை.'' ''ஆம் மகனே மெய்யான நம்பிக்கையினால் அநேக புதுமையான காரியங்களை அனுபவிக்கமுடியும்.'' அவ்வாறு கூறி அம்மா எனது தலையைத் தடவினார்கள்.

### பார்வையற்ற பர்த்திமேயு நம்பிக்கையினால் பார்வை பெற்றார்.

(கிறிஸ்தவரில் இருக்க வேண்டிய இந்த நம்பிக்கை என்பது என்ன?)

நம்பிக்கை என்பது நாம்
எதிர்நோக்கி இருப்பவை
கிடைக்கும் என்னும் உறுதி.
கண்ணுக்குப் புலப்படாதவை
பற்றிய ஐயமற்ற நிலை
எபிரேயர். 11:1

இறைவனால்
அனைத்தும் செய்ய
முடியும் என்பதை
நம்புங்கள் அதுவே
நம்பிக்கை

**இறை வார்த்தைக்கூடாக நம்பிக்கையைப்பற்றி மேலும் தேடிப்பார்த்து குறிப்பிடுக.**

| | | |
|---|---|---|
| யாக்கோபு 2:17 | கலாத்தியர் 3:26 | லூக்கா 9:23 |
| மத்தேயு 17:20 | 1 திமொத்தேயு 6:12 | கலாத்தியர் 2:16 |

கிறிஸ்தவர்களான எங்களின் அனுதினவாழ்விற்கு

- நம்பிக்கையில் உறுதியாய் இருப்போம்.
- நம்பிக்கையோடே இயேசுவிடம் கிட்டிச்சேர்வோம்.
- நம்பிக்கையின் பிரதிபலனை அனுபவிப்போம்.
- நம்பிக்கையின் வல்லமையினால் வாழ்வை வெற்றி கொள்வோம்




வழிபடுவோம் இறைவனை விசுவாசத்துடன்
உயர்த்திடுவோம் இறைவனை விசுவாசத்துடன்
வேண்டிடுவோம் கடவுளை விசுவாசத்துடன்
இறைவன் பின் செல்வோம் விசுவாசத்துடன்.

வேதனை துன்பம் மத்தியில் விசுவாசத்துடன்
நோய் துன்பம் ஏற்படும்போது விசுவாசத்துடன்
தடைகள் பயங்கள் மத்தியில் விசுவாசத்துடன்
ஆண்டவரிடம் செல்வோம் விசுவாசத்துடன்

சுகம் பெறுவோம் மெய்யான விசுவாசத்துடன்
வெற்றி பெறுவோம் விசுவாசத்துடன்
வல்லமை பெலன் பெறுவோம் விசுவாசத்துடன்
ஆண்டவரின் மெய்யான விசுவாசத்துடன்

தேவ பிள்ளைகளாக விசுவாசத்துடன்
வாழ்ந்து செல்வோம் விசுவாசத்துடன்
கிறிஸ்துவுக்குள் உண்மை விசுவாசத்துடன்
முன்னோக்கி செல்வோம் விசுவாசத்துடன்

*மனனவசனம்*
*எபிரேயர்:* 11:1

**நம்பிக்கை என்பது நாம் எதிர்நோக்கி இருப்பவை கிடைக்கும் என்னும் உறுதி ; கண்ணுக்குப் புலப்படாதவை பற்றிய ஐயமற்ற நிலை**

செயற்பாடு

1 . நற்செய்தி நூல்களில் குறிப்பிடப்பட்டவாறு நம்பிக்கையினால் சுகம் பெற்றவர்களை அட்டவணைப்படுத்துக.

# 15 எல்லையற்ற மன்னிப்பு

கிறிஸ்தவர்களாகிய நாம் இறைவனிடமிருந்து பெறும் சிறப்பான கொடையானது பாவத்திற்கான மன்னிப்பாகும். எமது பாவத்திற்கு இறைவனிடமிருந்து மன்னிப்புப் பெற்றுக் கொள்வதற்கு எமது பாவத்தை ஏற்றுக் கொள்ளுதல், மனம் வருந்துதல், மீண்டும் அப்பாவத்தைச் செய்வதில்லை என்று உறுதி எடுத்தல் ஆகிய செயற்பாடுகள் மிகவும் முக்கியமானதாகும். நாங்கள் எமது பாவங்கள் தொடர்பாக மனம் திரும்பி மீண்டும் வரும்வரை, எங்களை எதிர்பார்த்து நிற்கும் அன்பான இயேசுவினால் கூறப்பட்ட இக்கதையைக் கேட்போம்.




கதை கூறுபவர்: இறைஅரசு நற்பிரஜைகளை உருவாக்கும் சூழலாகும். கடவுளின் அன்பும், மன்னிப்பும் நிறைந்து காணப்படும். இடம் அது.

கடவுளை விட்டுவிலகியோர், தவறுகள் செய்திருந்தாலும் கடவுளின் அன்பினால் மன்னிக்கப்பட்டு, மீண்டும் கடவுளிடம் கொண்டுவரப்படுவார்கள்.

சிறுவர்களின் வருகையையும் எதிர்பார்த்து இருக்கும் அவரின் அன்பு எல்லையற்றது. தன்னிடம் வரும் பிள்ளைகளை ஏற்றுக்கொண்டு மன்னிக்கும் இறை வனாவார்.

மன்னிப்பின் தன்மையைக் கூறுவதற்கு, இயேசு கூறிய கதையைக் காதுள்ளோர் கேட்பர். மன்னிப்பின்

சக்தியை நன்றே விளங்கிக் கொள்வர். தந்தையும் இரு மகன்களும் ஓர் ஊரில் வசித்தார்கள் அவர்களின் வாழ்க்கைக் கதையை கூறுகின்றேன், கேளுங்கள்.

இளையமகன் : தந்தையே! உங்களிடமுள்ள ஆஸ்தியில் எனக்குரிய பங்கை எனக்கு பிரித்துக் கொடுங்கள்.

கதை கூறுபவர் : எல்லையற்ற அன்பு காட்டியவர் மகனுடைய சொல்லைக் கேட்டு, அவனுடைய பங்கை எழுதிக் கொடுத்தார். சிறிது நாளைக்குப்பின், இந்த மகன் தனக்குரிய சொத்தைப் பெற்றுக் கொண்டு தூர தேசத்திற்குப் போனார்.

இளையமகன் : நண்பர்களே, கிடைக்கும் சுதந்திரத்தை சந்தோஷ மாகக் கழிப்போம். பணத்தால் வரக்கூடிய சந்தோ ஷத்தை ஒன்று சேர்ந்து கழிப்போம். எமது விருப் பப்படி கொண்டாடுவோம்.

கதை கூறுபவர் : தந்தை கண்ணீருடன் நாட்களைக் கழித்தார். தூர தேசத்துக்குச் சென்ற இளைய மகனின் சொத்துக்க ளெல்லாம் முடிந்தபின் அவனது வாழ்வில் குறைவு ஏற்படத் தொடங்குகின்றது. எதிர்பாராத விதமாக பட்டினியால் வாடினான். எனவே தொழில் ஒன்றை தேடிச் சென்றான்.

இளையமகன் : ''பெரியவர்களே! எனக்கு இரக்கம் காட்டுங்கள், எனக்கு ஓர் தொழில் தாருங்கள்'' என்றான்.

பண்ணையாளர் : ''மிருகப் பண்ணையில் உதவி செய்ய முடியுமானால் உன்னை அனுப்புகிறேன்.

கதை கூறுபவர் : மிருகங்களைப் மேய்த்துக்கொண்டு தனது காலத்தை கழித்தார். ஆனால் உண்பதற்குக் கூட உணவு கிடைக் கவில்லை மிருங்கங்களின் உணவை உட் கொண்டு வாழும் நிலை ஏற்பட்டது. பணம் இருந்தபோது

அவனோடு இருந்தவர்கள் இப்போது அவனைக் கை விட்டனர்.

இளையமகன் : எனது தந்தையின் வேலைகாரர்களுக்குத் தேவைக்கு அதிகமாக உணவு உண்டு. என் தகப்பனிடம் சென்றால் எனக்கும் உணவு கிடைக்கும். ''நான் உங்கள் மகன் என்று கூற அருகதை அற்றவன். என்னை ஒரு வேலைக் காரனாக ஏற்றுக் கொள்ளுங்கள்,'' என்று கூறுவேன்.

கதை கூறுபவர்: சரியான புத்தி வந்தவுடன் நடந்தவைகளை நினைத்து மனதில் கவலைப்பட்டு, இளைய மகன் தந்தையின் வீட்டுக்குப் போனான். தகப்பனின் மனம் அன்பாலும், கருணையாலும் நிரம்பியது. மகனின் கழுத்தைக் கட்டித்தழுவி உச்சி முகர்ந்தார் தந்தை.

இளையமகன் : ''உங்களுக்கும் இறைவனுக்கும் எதிராகப் பாவம் செய்தேன். மகன் என்று கூறத் தகுதியற்றவனானேன். என்னை ஓர் வேலைக்காரனாக ஏற்றுக்கொள்ளுங்கள்.''

கதை கூறுபவர்: மனந்திரும்பி மீண்டும் வந்த மகனை தந்தை மன்னித்து ஏற்றுக்கொண்டார்; மன்னிப்பின் மூலம் பொங்கி வந்த அன்பினால் மகனைக் கட்டித்தழுவி அரவணைத்தார்.

தந்தை : ''வேலைக்காரரே, உடனே வாருங்கள், நல்ல உடையை அணிவியுங்கள், அழகான மோதிரம் அணிவியுங்கள், விருந்திற்கு ஆயத்தமாகுங்கள். உண்டு குடித்து, சந்தோஷப்பட்டு இருங்கள். இவன் மரித்து, உயிர்த்து வந்துள்ளான். காணாமல் போன மகன் கண்டு பிடிக்கப்பட்டுள்ளான்''

கதை கூறுபவர்: மீண்டும் வந்த தன் மகனை சிறப்பாக வரவேற்க விலை உயர்ந்த உடையை உடுத்துகிறார். அவன் சேவகன் அல்ல, தனது மகன் என விளக்கினார்.

நல்ல செருப்பு ஜோடியைக் கொடுத்து, பாதங்களை அலங்கரித்தார். விரலில் ஒரு மோதிரத்தைப் போட்டு, மகன் என்ற இடத்தைக் கொடுகின்றார். இதன்மூலம் அதிகாரமும் செல்வாக்கும் மகனுக்கு மீண்டும் கிடைத்தது. பண்ணைக்குப் போயிருந்த மூத்த மகன் வீட்டுக்கு வருகிறார். சங்கீதச் சத்தம் கேட்டது அவர் அவசரமாக வீட்டை நெருங்கும்போது, ''இது என்னவென்று விளங்கவில்லை'' அருகிலிருந்த வேலைக்காரனிடம் ''இது என்ன சத்தம்'' என வினவினான்.

மூத்த மகன் : ''நான் காலையில் பண்ணைக்குப் போகும் போது இவ்வாறு ஒன்றும் இருக்கவில்லை. இப்போது என்ன நடந்தது''

வேலைக்காரன்: உமது சகோதரன் வந்துள்ளார். நீங்களும் சந்தோஷப்படுவீர்கள் உங்கள் தந்தை இப்போது சந்தோஷத்துடன் இருக்கிறார்.

கதைகூறுபவர் : இதைக் கேட்ட மகன் கோபமடைந்தார். வீட்டின் உள்ளே கூடச் செல்லாமல், தந்தையுடன் சந்தோஷத்தில் கலந்து கொள்ள மறுத்தான். வீட்டினுள் வராத மூத்த மகனுடைய சத்தத்தைக் கேட்டு தந்தை வெளியே வந்து, அவனை உள்ளே வருமாறு அழைத்தார். தந்தையின் வேண்டுகோளுக்கு அவர் இணங்காமல் சகோதரனுக்கு மன்னிப்பு கொடுக்க மறுத்தார். எத்தனையோ வருடம் தந்தையுடன் வாழ்ந்தாலும், மூத்தமகன் தகப்பனின் அன்பை முழுமையாக விளங்கிக் கொள்ளவில்லை

மூத்த மகன் : ''எத்தனையோ வருடகாலம் நான் உங்களுக்கு சேவை செய்தேன். உங்களின் கட்டளைகளை ஒரு போதும் மீறவில்லை. அப்படியிருந்த போதும்

நண்பர்களுடன் மகிழ்ந்திருக்க நீங்கள் எனக்கு இடம் தரவில்லை. ஓர் ஆட்டுக்குட்டியைக் கூட எனக்கு தரவில்லை உங்கள் சொத்தை அழித்த மகன் வந்ததும், நீங்கள் விருந்து போட்டிருக்கிறீர்கள்!''

தந்தை : ''மகனே நீ எப்போதும் என்னுடையவன் என்னிட முள்ளவை அனைத்தும் உனக்குத்தான். அவன் மரித்து உயிர்த்திருக்கிறான். நாம் எல்லோரும் சந்தோஷப் படுவோம்.''

கதை கூறுபவர்: இளைய மகனுக்கு மன்னிப்பளித்த தந்தையைப் போல், பிழைசெய்த எங்களுக்கும் எப்போதும் மன்னிப்பு வழங்க கடவுள் ஆவலாய் இருக்கிறார். செய்த தவறுக்கு மனம் வருந்துவது இறைவனுடைய பிள்ளைகளின் சிறப்பியல்பாகும். மீண்டும் அப் பிழையைச் செய்வதில்லையெனத் தீர்மானிக்கவும் வேண்டும். மன்னிப்புமூலம் மாற்றம் அனுபவிக்க, மன்னிப்பின் வாழ்க்கையை வேண்டி இறைவனிடம் செல்வோம். இறைவனின் எல்லையற்ற மன்னிப்பைத் தேடி எல்லோரும் வருகிறார்கள். மன்னிப்பைவழங்கி பாவத்திலிருந்து மீட்பதற்கு அவர் காத்திருக்கிறார். எதுவித நிபந்தனையுமின்றி இறைவனுடைய மன்னிப்பைப் பெற இறை தந்தையிடம் செல்வோம். பிழைக்காக மனம் வருந்தி, நாம் இன்று அந்த மன்னிப்பின் வாழ்வைப் பெற்று, ஏனையவரின் பிழைக்கும் மன்னிப்பு வேண்டி, இறைவனிடம் சென்று புதிய பாதையில் செல்வோம்.

*மனனவசனம்*
***லூக்: 23:34***

**அப்போது இயேசு, "தந்தையே இவர்களை மன்னியும். ஏனெனில் தாங்கள் செய்வது என்னவென்று இவர்களுக்குத் தெரியவில்லை" என்று சொன்னார்.**

*செயற்பாடு*

1. ***மன்னிப்பு சம்பந்தமாக இயேசு கற்பித்த இறை வேண்டலில் குறிப்பிடப்பட்டுள்ளதை கண்டறிந்து எழுதுக.***

2. ***மன்னிப்புடன் தொடர்புடைய கிறிஸ்தவ குணாதிசயங்களைப் பட்டியல்படுத்துக.***

# 16 நன்றி செலுத்துவோம்

பாவத்திற்கான மன்னிப்பு, நோய்களில் இருந்து நலமடைதல் போன்று எமது வாழ்விற்கான அனைத்து ஆசீர்வாதங்களையும் கடவுள் தாமே எமக்கு தருகின்றார். நாம் எப்போதும் எமது தேவைகளுக்காக இறைவனிடம் மன்றாடும் போது, அவைகளை ஏற்ற வேளையில் அவர் நிறைவேற்றித்தருவார் என்பதை, எமது அனுபவங்களுக்கூடாக அறிந்துகொள்கின்றோம். இருப்பினும் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்ட நாம், சில வேளைகளில் அவைகளை எமக்கு தந்தவர் இறைவன் என்பதை மறந்து அவருக்கு நன்றி செலுத்த தவறிவிடுகின்றோம்.

நாம் இறைவனிடம் பெற்ற ஆசீர்வாதங்களுக்காக அவருக்கு நன்றிசெலுத்தும் முக்கியத்துவத்தை, இயேசு வெளிப்படுத்திக் காண்பித்த முறையை இப்பாடத்தினூடாக காண்போம்.




இன்றைய தினத்தை நாம் அனைவரும் சந்தோசமாகவும் விநோதமாகவும் களித்தோம். வழமையாக குடும்பத்தில் அனைவரும் ஒன்று கூடி இரவு வேளை ஜெபத்தை நடத்துவோம். இன்று பாட்டியும் தாத்தாவும் எங்கள் வீட்டிற்கு வந்தார்கள்.

பாட்டி : மகனே இன்று எனக்கு விசேடமாக ஜெபிக்க வேண்டியிருக்கின்றது.

மகன் : ஆம் பாட்டியம்மா, எனக்குத்தெரியும். நீங்கள் சுகயீனமாக இருந்து, சுகம் பெற்று, நீண்ட நாட்களுக்குப் பின் இன்று தானே எங்கள் வீட்டிற்கு வந்திருக்கின்றீர்கள்.

பாட்டி : நான் உங்கள் அனைவரையும் பார்ப்பதற்கு ஆசையாக இருந்தேன்.

மகன் : நாங்களும் பாட்டியம்மா இல்லாமையால் மிகவும் சோர்ந்து போய் தனிமையில் இருந்தோம்.

பாட்டி : எங்களுக்கு இறைவன் தரும் எல்லாவிதமான ஆசீர்வாதங்களையும் நாம் மறந்துவிடாமல் அவருக்கு நன்றி செலுத்துவது முக்கியமாகும்.

மகள் : பாட்டியம்மா பெற்றுக்கொண்ட சுகத்திற்காக இன்று விசேஷமாக கடவுளுக்கு நன்றி கூறுவோம்.

மகன் : அக்கா, பாட்டியம்மா இறைவனுக்கு நன்றி செலுத்துவதற்காக மிகவும் அழகான பாடலை இயற்றியிருக்கின்றார்கள்.

தந்தை : நல்லது பிள்ளைகளே, நாம் ஜெப வேளையை ஆரம்பிப்போம். அம்மா அந்த பாடலைப்பாடுங்கள். நாம் அனைவரும் ஜெபத்தோடு அதற்கு செவிசாய்ப்போம்.

**நன்றி என்று சொல்லுகிறோம் நாதா**
**நாள் தோறும் துதிக்கிறோம் நாதா**

**நன்றி இயேசு ராஜா**
**நன்றி இயேசு ராஜா**

**நோய்கள் எல்லாம் தீர்த்தீரே நன்றி ஐயா**
**அடைக்கலமும் ஆறுதலும் தந்தீர் ஐயா**

**கண்மணி போல் காத்தீரே நன்றி ராஜா**
**கைவிடாது கரம் பிடித்தீர் நன்றி ராஜா**

*(எல்லோரும் ஜெபம் செய்து முடிந்தபின்..............)*

மகன் : தாத்தா இன்றும் எமக்கு வேதாகமக் கதைகள் சொல்லித்தருவீர்களா?

தாத்தா : நல்லது மகனே, இன்று நான் அழகிய வேதாகமக் கதையைக் கூறுகின்றேன். ஒருநாள் இயேசு எருசலேமுக்குச் செல்லும்போது கலிலேயா சமாரியா பகுதிகள் வழியாகச் சென்றார். அவர் ஓர் ஊருக்குள் வந்த பொழுது பத்து தொழுநோயாளர்களைச் சந்தித்தார்.

மகள் : தாத்தா யாரை நாங்கள் தொழுநோயாளர் எனக் கூறுகின்றோம்?

தந்தை : தொழுநோய் என்பது தோல் முழுவதும் ஏற்படும் மிகவும் பயங்கரமான தொற்று நோயாகும். ஒருவருக்கு தொழுநோய் என்பதை அறிந்தால் அவரை அக்காலத்தில் பாவியானவன் எனக் கருதி, சமுதாயத்தில் ஒதுக்கி, தனிமையான இடத்திற்கு அனுப்பிவிடுவார்கள். அவர்கள் மக்கள் வாழும் பகுதிக்குள் செல்லும்போது மணியை ஒலித்துக் கொண்டு செல்ல வேண்டும். அவ்வாறு மணி சத்தத்தோடு வருவதை அறிந்த மக்கள், தொழுநோயாளி வருகிறார் என அறிந்து, அனைவரும் அவ்வழியில் இருந்து விலகிச்செல்வார்கள்.

மகள் : அது ஏன் தாத்தா?

தாத்தா : யூத சமய சட்டங்களுக்கு ஏற்ப தொழுநோயாளியென அறிந்த ஒருவரைத்தொடுவது தீட்டாகும். யாராவது அவ்வாறு செய்தால், அவர் குருவிடம் சென்று, தீட்டு அகற்றி தன்னை தூய்மைப்படுத்துவது அவசியமாகும்.

மகன் : தாத்தா, தொழுநோயாளிகள் அக்காலத்தில் மிகுந்த துன்பத்தை அனுபவித்திருப்பார்கள் அல்லவா?

தாத்தா : ஆம் மகனே, அவர்களுக்கு துன்பங்கள் மட்டுமல்ல, அனைவரையும் விட்டுபிரிந்து சென்று தனிமையான பாலை நிலத்தில் இருக்கும் போது, வெறுமையையும், தனி மையையும் உணர்ந்திருப்பார்கள்.

மகன் : தாத்தா! இயேசுவும் சீடர்களும் இந்த தொழுநோயாளர் பத்துப்பேரையும் கண்டு, வழி விலகிச் சென்றார்களா?

தாத்தா : நோயினால் துன்பப்படுபவர்களுக்கும், இவ்வாறு சமுதாயத்தால் ஒதுக்கப்பட்டவர்களுக்கும் கருணைக் காட்டுவது இயேசுவின் பணியின் ஒரு பகுதியாகும். எனவே, அவர் அவர்களை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு உதவி செய்தார். இயேசுவிடம் வந்த இந்த பத்து தொழு நோயாளர்களும் தூரத்தில் நின்று, ஐயா இயேசுவே எங்களுக்கு இரங்கும்'' என வேண்டினார்கள். அவர் அவர்களைப் பார்த்து ''நீங்கள் போய் உங்களைக் குருக்களிடம் காண்பியுங்கள்'' என்றார் .



படம் 16.1 இயேசு தொழுநோயாளர்களை குணப்படுத்தல்

மகள் : தாத்தா, ஏன் இயேசு அவ்வாறு கூறினார்?

தாத்தா : தொழுநோயாளர்கள் சுகம் பெற்றவுடன் யூத சட்ட முறைப்படி, குருக்களிடம் தங்களைக் காண்பித்து சுகமாக் கப்பட்டுவிட்டதாக அவர்களிடம் அனுமதிச்சான்று பெற்றுக்கொள்ள வேண்டும்.

மகன் : தாத்தா, இந்தப்பத்துப் பேரும் சுகம் பெற்றார்களா?

தாத்தா : ஆம். அவர்கள் புறப்பட்டுப் போகும்போது, வழியிலே சுகமானார்கள். அவர்களுள் ஒருவர் தம் நோய் நீங்கியிருப்பதைக் கண்டு உரத்த குரலில் கடவுளைப் போற்றிப் புகழ்ந்து இயேசுவுக்கு நன்றி செலுத்தினார். அவரோ ஒரு சமாரியர் அக்காலத்தில் யூதர்கள் சமாரியரை ஒதுக்கி வைத்திருந்தனர்.

மகன் : தாத்தா, இயேசுவும் ஒரு யூதர் அல்லவா?

தாத்தா : ஆம் மகனே! ஆண்டவர் அனைவரையும் ஒரேவிதமாகவே நேசித்து பணி செய்தார். யூதர்களுக்கும் பிற இனத்தவர்களுக்கும் ஒரேவிதமாகவே கருணை காட்டினார். இயேசு சமாரிய இனத்தைச் சேர்ந்த அவனைப் பார்த்து, ''பத்துப் பேர்களின் நோயும் நீங்கியதல்லவா? மற்ற ஒன்பது பேரும் எங்கே?'' என்றார். இந்தத் தொழுநோயாளர்கள் ஒன்றிணைந்து குழுவாக வந்து இயேசுவிடம் சுகம் வேண்டினால் அவரிடமிருந்து சுகம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தனர். ஆனால் சுகம் கிடைத்த பின் அவருக்கு நன்றி செலுத்துவதற்காக திரும்பி வந்தவர் ஒருவர், மாத்திரமே அவரும் சமாரிய இனத்தைச் சேர்ந்தவர். அந்த சமாரியனை இயேசு மிகவும் பாராட்டினார். அவ்வாறே மற்ற ஒன்பது பேர்களும் இயேசுவிடம் வராததினால் அவர் கவலைக் கொண்டிருப்பார் இயேசு சமாரிய இனத்தைச் சேர்ந்த தொழுநோயாளியைப் பார்த்து ''எழுந்து செல்லும் உமது நம்பிக்கை உமக்கு நலமளித்தது'' என்றார்.

மகள் : தாத்தா, அவன் சென்று தன்னை குருவிடம் காண்பித்தானா?

தாத்தா : ஆம் அவன் இந்த சுத்திகரிப்பைச் செய்திருப்பான். அவ்வாறே அவன் தன் வீட்டுக்குச் சென்று, தான் பெற்றுக் கொண்ட சுகத்தைக் குறித்துச் சந்தோஷமாகச் சாட்சி பகர்ந்திருப்பான். இயேசுவின் கருணையைக் குறித்து அவன்

எவ்வளவு சந்தோஷம் அடைந்திருப்பான். ஆனால் மகனே அந்த மீதியான ஒன்பது பேரும் பெற்ற சுகத்திற்காக ஆண்டவருக்கு நன்றி கூறியிருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்.

மகன் : ஆம், தாத்தா நாங்கள் தனித்தனியாகவும் குடும்பமாகவும் ஒன்றிணைந்து ஆண்டவருக்கு நன்றி செலுத்துவோம்.

தாத்தா : ஆம், மிகவும் நல்லது மகனே. ஆண்டவரிடம் இருந்து நாம் பெறும் அளவிட முடியாத ஆசீர்வாதங்களுக்காக ஆண்டவரின் பிள்ளைகள் என்ற ரீதியில், மறந்துவிடாமல் ஆண்டவருக்கு நன்றி செலுத்த வேண்டும். அவ்வாறே, பிறர் எமக்கு செய்த உதவிகளுக்காகவும் நாம் அவர்களுக்கு நன்றி கூறவேண்டும்.

மகள் : இன்றைய காலத்திலும் தொழுநோய் ஏற்படுகின்றதா?

தாத்தா : ஆம் மகளே, தொழுநோய் என்பது இன்று மிகவும் இலகுவாக சுகப்படுத்தக் கூடிய ஒரு நோயாகும். இன்று மருத்துவம் மிகவும் முன்னேற்றம் அடைந்துள்ளது. அவ்வாறான நோய்களுக்கு மருந்துகளைக் கண்டுபிடித்திருக்கின்றார்கள். எமது நாட்டில் ஹெந்தல பிரதேசத்தில் தொழுநோயாளர்களுக்காக வைத்தியசாலை அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறான நல்ல வைத்திய சேவைகளுக்காக நாம் கடவுளுக்கு நன்றி கூறி துதி செலுத்த வேண்டும்.

அம்மா : ஆம் நாங்கள் இப்போது ஜெபம் செய்து, இறைவனுக்கு நன்றி கூறுவோம்.

பாட்டி : ஆம் நாங்கள் கண்களை மூடி அமைதியாக ஆண்டவரின் ஜெபத்தை சொல்வோம். செய்த அனைத்து பாவங்களுக்காகவும் மனம் வருந்தி, அவரிடம் மன்னிப்பு வேண்டுவோம். நாம் பெற்ற அனைத்து ஆசீர்வாதங்களுக்காகவும் அவருக்கு நன்றி செலுத்துவோம்.

தாத்தா : அன்பான இறைவனே! இந்த நாளுக்காக உமக்கு நாங்கள் நன்றி கூறுகின்றோம். எங்கள் சொல்லாலும் செயலாலும் செய்த பாவங்களுக்காக எங்களுக்கு மன்னிப்பு தாரும். சுகம் பெற்ற தொழுநோயாளியைப் போல் விசுவாசத்தோடு வாழ்வதற்கும், அனைத்திலும் எங்கள் வாழ்வை உமக்கு நன்றி பலியாக அர்ப்பணிக்கவும் எங்களுக்கு வரம் அருளும். எல்லாக் கனமும் மகிமையும் என்றென்றைக் கும் உம்முடையவைகளே ஆமென்.

தந்தை : அனைவரும் இயேசு கற்பித்துத்தந்த இறை வேண்டுதலை/ குடும்ப ஜெபத்தை சேர்ந்து கூறுவோம்.

***மனனவசனம்:***
***திருப்பாடல்: 106:1***

**அல்லேலூயா! ஆண்டவருக்கு நன்றி**
**செலுத்துங்கள் ஏனெனில் அவர் நல்லவர்!**
**என்றென்றுமுள்ளது அவரது பேரன்பு!**

செயற்பாடு

1. உமது வாழ்வில் இறைவனுக்கு நன்றி கூறிய சந்தர்ப்பங்கள் ஐந்தினை எழுதுக?

2. இறைவனுக்கு நன்றி கூறுவது பற்றி கீழே தரப்பட்டுள்ள விவிலிய வசனங்களை எழுதி அவற்றில் உமக்கு மிகவும் விருப்பமான வசனத்தை மனனம் செய்யவும்.

திருப்பாடல் 75:1 உமக்கு நன்றி செலுத்துகின்றோம், கடவுளே, உமக்கு நன்றி செலுத்துகின்றோம். உமது பெயரைப் போற்று கின்றோம். உம் வியத்தகு செயல்களை எடுத்து உரைக்கின்றோம்.

திருப்பாடல் 136:1 ஆண்டவருக்கு நன்றி செலுத்துங்கள். ஏனெனில் அவர் நல்லவர் என்றும் உள்ளது அவரது பேரன்பு

திருப்பாடல் 145:2 நாள்தோறும் உம்மைப் போற்றுவேன். உமது பெயரை என்றும் எப்பொழுதும் புகழ்வேன்.

கொலோசையர் 3:17 எதைச் சொன்னாலும், எதைசெய்தாலும், அனைத்தையும் ஆண்டவர் இயேசுவின் பெயரால் செய்து,அவர்வழியாய்த் தந்தையாம் கடவுளுக்கு நன்றி செலுத்துங்கள்.

# 17 வாழ்வில் தாழ்மை

**கிறிஸ்தவ பிள்ளைகளான எம்மிடம் காணப்பட வேண்டிய சிறந்த குணாதிசயங்கள் பலவற்றை முன்னைய பாடங்களில் அறிந்து கொண்டோம். கடவுளில் நாம் கொண்டிருக்க வேண்டிய நம்பிக்கை, கிறிஸ்தவரான எம்மில் காணப்பட வேண்டிய மன்னிப்பு, மற்றும் நாம் பெற்றுக் கொண்ட ஆசிகளுக்காக நன்றி செலுத்துதல் போன்றவை அவை.**

**இப்பாடத்தில் நாம் முயற்சிப்பது கிறிஸ்துவை பின்பற்றுபவராக காணப்பட வேண்டும் என்பதே. இயேசு கிறிஸ்துவின் மூலமாக வெளிப்படுத்தப்பட்ட தாழ்மையானது கிறிஸ்தவ குணாதிசயங்களில் முக்கியமானது.**

ஒரு நாள் ஒர் ஆய்வுக் குழுவினர் வாகனத்திலேறி காட்டுப் பகுதியில் பயணம் செய்தனர். வேகமாக முன்னோக்கி சென்ற வாகனத்தைத் திடீரென ஓர் இடத்தில் நிறுத்தவேண்டிய நிலை ஏற்பட்டது. ஏனெனில், பாதையின் குறுக்கே பெரிய மரம் ஒன்று விழுந்து கிடந்தது. இதனால் எவருக்கும் பயணம் செய்ய முடியவில்லை. இதனை வெட்டி அகற்றுவதற்கு அவர்களிடம் ஆயுதங்கள் எதுவும் இருக்கவில்லை. ஆய்வுக் குழுவின் தலைவன் அந்த மரத்தை எப்படியாவது வெட்டி அகற்றி போக்குவரத் துக்காக பாதையை ஒழுங்கு செய்யுமாறு சத்தமிட்டு கட்டளையிட்டார். மரத்தை தூக்கி அகற்றுவதற்கு ஆய்வுக் குழுவினர் முயற்சி செய்தபோது, ஆய்வுக் குழுவினரின் தலைவர், வாகனத்தில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். அவர் எவ்வித உதவியும் செய்ய முன்வரவில்லை. அவ்வேளையில் குதிரையிலேறி ஒருவர் அவ்விடத்திற்கு வந்தார். அவரைக் கண்ட ஆய்வுக் குழுவினரின் தலைவர் அவனைக் குதிரையிலிருந்து இறங்கி தனது ஆய்வுக் குழுவினருக்கு உதவி செய்யுமாறு சத்தமிட்டுக் கூறினார். அவரோ, மறு வார்த்தையும் பேசாமல் குதிரையிலிருந்து இறங்கி, உடனடியாகப்போய் ஆய்வுக் குழுவினருக்கு உதவி செய்தார். அவர்கள் ஒற்றுமையாக ஒன்றிணைந்து அந்த பெரிய மரத்தை தூக்கி பாதையிலிருந்து அகற்றினர். மீண்டும் அம் மனிதன் குதிரை மீது ஏறி பயணத்தைத் தொடர்ந்தான். அவ்வேளையில் இன்னும் சிலர் வந்து

மிகவும் மரியாதையோடு அவர் பின்னே செல்லத் தொடங்கினர். ஆய்வுக் குழுவின் தலைவருக்கு இது மிகவும் கேள்விக்குறியாக இருந்தது. அவர் உடனடியாக தனது குழுவினரை அழைத்து ''குதிரை மீது ஏறி வந்து, உங்களுக்கு உதவி செய்த மனிதன் யார்?'' எனக் கேட்டார். அவர்களுக்கு அவ்வாறு உதவி செய்தவர் அந்நாட்டு அரசன்.

இதனைக் கேட்டதும் ஆய்வுக் குழுவினரின் தலைவருக்கு பயமும் வெட்கமும் ஏற்பட்டது. அவரின் முகத்தோற்றம் மாறி அவரால் எதுவும் பேச முடியாமற் போனது. அரசனிடம் காணப்பட்ட தாழ்மை அந்த ஆய்வுக் குழுவினரின் தலைவரிடம் காணப்படவில்லை. இவ்விதமான தாழ்மையைப் பற்றி நாம் மேலும் அதிகமாக கற்றுக் கொள்வோம்.

## தாழ்மை

**கிறிஸ்தவர்களாக எமது வாழ்வில் வெளிப்படுத்தப்பட வேண்டிய முக்கிய குணாதிசயம்.**

இயேசு தனது முன்மாதிரியான வாழ்வினுடாக சிறந்த குணங்களை வெளிப்படுத்தினார். அவர் தமது சீடர்களின் பாதங்களைக் கழுவியதன் மூலம் தாழ்மை என்னும் பண்பைக் காட்டினார்.

இயேசு வாழ்ந்த சமுதாயத்தில் சிலர் தம்மை நேர்மையானவர் என்று நம்பி மற்றவர்களை இகழ்ந்து ஒதுக்கினர். பரிசேயரைப் போன்ற சமயக் குழுவினரும் இவ்வாறே செயல்பட்டனர் என்பதைத் திருவிவிலியத்தில் நாம் வாசித்து அறியலாம். விசேடமாக; வரிதண்டுவோர், பாவியான பெண்கள், பிற இனத்தவர்கள், நோயாளர்கள் போன்றோர் யூத சமுதாயத்தால் நிராகரிக்கப்பட்ட குழுவினர் ஆவர்.

அன்றைய சமுதாயத்தில் சிறுவர்கள் எதுவித முன்னுரிமையும் வழங்கப்படாமல் நிராகரிக்கப்பட்டனர். அவ்வாறே வரிதண்டுவோரும் திருக்கோவிலுக்குள் செல்வதற்குத் தடை செய்யப்பட்டிருந்தது. இருப்பினும் அவர்கள் எப்போதும் இயேசுவுடனே கூட இருந்தனர். அவர் அவர்களை ஏற்றுக்கொண்டு கருணை காட்டினார்.

தரப்பட்டிருக்கும் உவமையின் மூலம், தன்னை நேர்மையானவர் என நம்பிப் பெருமையோடு இருப்போரை இயேசு நிராகரித்தார் என்பதும்; தனது பாவங்களுக்காக மனம் வருந்தி மன்றாடுவோரை இயேசு ஏற்றுக் கொள்கிறார் என்பதும் விளங்குகின்றது.




**இந்த உவமையின் படி:-**

இறைவனிடம் வேண்டுவதற்காக இருவர் ஆலயத்திற்குச் சென்றனர்

மதத்தலைவர் → ஒருவன் பரிசேயன்

வேண்டுதல்: தன்னைக் குறித்து பெருமைப் பாராட்டுதல் → ஒருவன் பரிசேயன்

மற்றையவன் வரிதண்டுபவன் ← உரோம பேரரசினால் வரி அறவிடுபவன்

வேண்டுதல்: தான் பாவியெனவும் தகுதியற்றவனெனவும் கடவுளுக்கு முன்பாக தன்னை தாழ்த்துதல் → மற்றையவன் வரிதண்டுபவன்

**இயேசு கூறியபடி**
**கடவுளுக்கு ஏற்புடையவராக வீடு திரும்பியவர் யார்?**
பரிசேயனா? வரிதண்டுபவனா?
**பரிசேயன் அல்ல வரிதண்டுபவன்.**

*''தம்மைத் தாமே உயர்த்துவோர் தாழ்த்தப்படுவர்''*
*இந்த கூற்றின் படி தன்னை உயர்த்தியவர் யார்?*
**பரிசேயன்**




**நான் மற்றவர்களைப் போல செல்வத்திற்கு ஆசைப்பட்டு நேர்மையற்ற முறையில் சம்பாதிப்பவன் அல்ல எனக்கூறினான்**

அவ்வாறே

* நான் இந்த வரிதண்டுபவரைப் போல் அல்ல
* வாரத்தில் இருமுறை நோன்பிருக்கின்றேன் எனவும்
* என் வருமானத்தில் பத்திலொரு பங்கைக்கொடுக்கிறேன் என்றும் கூறினான் .

அவன் இறைவனுக்கு முன்பாக தன்னை உயர்த்தினான் தனது நேர்மையைத்தானே வெளிப்படுத்தி பிறரை இகழ்ந்தான்.

தம்மைத்தாமே தாழ்த்துவோர் உயர்த்தப்படுவர்
இந்த உவமையின் படி தன்னை தாழ்த்தியவர் யார்?
**வரிதண்டுபவன்**




* அவன் தேவாலயத்தின் தொலைவில் நின்றான்.
* வானத்தை அண்ணாந்து பார்க்கக்கூடத் துணியவில்லை.
* தன் மார்பில் அடித்துக்கொண்டான்.

**அவ்வாறே, ''கடவுளே! பாவியாகிய என்மீது இரங்கியருளும்'' எனப் பணிவோடு வேண்டினான்.**

இவ் வரி தண்டுபவன்

* துக்கத்தோடு
* வெட்கத்தோடு
* பயத்தோடு
* மனம் வருந்தி
* தன்னைத்தாழ்த்தி

***மிகவும் பணிவோடு கடவுளின் முன்னிலையில் நின்றான் கடவுள் அவனுடைய தாழ்மையை உணர்ந்து அவனின் எளிய மன்றாட்டை ஏற்றுக்கொண்டார்.***

தான் மட்டுமே நீதிமானும் நேர்மையாளனும் என எண்ணி தனது தகைமைகளை வர்ணித்து தனக்குரியவைகளைக் குறித்து பெருமை பாராட்டி மற்றவர்களை இகழ்ந்து பிறரின் மனதை துக்கப்படுத்துவது

எப்போதும்

கடவுளின் பிள்ளைகளுக்கு ஏற்றதல்ல

**அதற்காக எப்போதும்**
சிந்தையாலும் சொல்லாலும் செயலாலும்

தாழ்மையாய் இருப்பதற்கு

நாம் முயற்சி செய்வோம்

கடவுளிடம் மன்றாடும் போது

* நாம் மனம்திரும்பிய மனதுடன் அவரண்டை சேர்வோம்.

* நாம் செய்த தவறுகளை எண்ணி அவரிடம் மன்னிப்பைப் பெறுவோம்.

* அவர் ஒருவரே தாழ்மையுள்ளவர் என்பதை நினைவில் கொண்டு அத் தாழ்மையை எமது வாழ்விலும் பெற்றுக் கொள்ள வேண்டுவோம்.

* கடவுளுடன் நாம் முறையான தொடர்பில் இணைவோம்.

* அவரின் இரக்கத்திற்கு எம்மை ஒப்புவிப்போம்.

***அவ்வாறு செய்தால்;***

***எமது தாழ்மையான மன்றாட்டைக் கடவுள் விரும்புவார்.***

இயேசு கூறிய இந்த உவமையின் மூலம்
எமது வாழ்க்கைக்காக

**பரிசேயனில் இருந்து கற்றுக்கொள்ளக்கூடிய படிப்பினை**
**வரிதண்டுபவனிடம் இருந்து கற்றுக்கொள்ளக்கூடிய படிப்பினை**

இரண்டையும் குறிப்பிடுங்கள்.

இவ்வாறு கற்றுக்கொண்ட பாடத்தின் மூலம்

* வீட்டில் கிறிஸ்தவப்பிள்ளையாக தாழ்மையோடிருப்பதற்கு

* பாடசாலையில் கிறிஸ்தவப்பிள்ளையாக தாழ்மையோடிருப்பதற்கு

*	சமுதாயத்தில் கிறிஸ்தவப்பிள்ளையாக தாழ்மையோடிருப்பதற்கும் உங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

*	தாழ்மை பலவீனமானது என எண்ண வேண்டாம்.

அப்போது நாம் எப்பொழுதும் கடவுளைப் போற்றும் பிள்ளைகளாவோம்

அவ்வாறே எமது தாழ்மையினால் வஞ்சனை பொய் போன்றவற்றின் மத்தியில் பலனுள்ளவர்களாய் எழுந்து நிற்கவேண்டும்.

எனவே தாழ்மையானது கடவுளின் பிள்ளைகளுக்கு மிகவும் அத்தியாவசியமான குணாதிசயம் என எண்ணி எப்போதும் தாழ்மையோடிருப்பதற்கு முயற்சி செய்யுங்கள். கடவுள் உங்களுக்கு நிச்சயமாக உதவி செய்வார்.

***மனனவசனம்:***
***யோவான்: 13-14***

**ஆண்டவரும் போதகருமான நான் உங்கள் காலடிகளைக் கழுவினேன் என்றால் நீங்களும் ஒருவர் மற்றவருடைய காலடிகளைக் கழுவக் கடமைப்பட்டிருக்கிறீர்கள்**

செயற்பாடு

1. இறைவனின் முன்னால் நீர் தாழ்மையாக ஏறெடுக்கும் ஒரு மன்றாட்டை எழுதுக?

2. பாடசாலை மாணவரான நீர் பெற்றோர், பெரியோர், ஆசிரியர் நண்பர் ஆகியோர் மத்தியில் தாழ்மையாக செயல்படும் முறையை எழுதுக.

# 18 திருவிவிலியம்



படம் 18.1 திருவிவிலியம்

திருவிவிலியம் கிறிஸ்தவர்களாகிய எமது புனித நூலாகும். ஆரம்பகாலத்தில் இது ஒரே புத்தகமாக அமைந்திருக்கவில்லை. ஆனால் இன்று திருவிவிலியம் ஒரே புத்தகமாக எமக்குக் கிடைத்திருக்கின்றது. இறை செய்தியானது வாய்மொழியாகக் காக்கப்பட்டு 1200 வருடத்திற்குள் புத்தகமாக வடிவம் பெற்றது.

திருவிவிலியம் பல எழுத்தாளர்களைக் கொண்டு எழுதப்பட்ட பலவிதமான புனித நூல்களைக் கொண்ட ஒரு நூல்தொகுப்பாகும். இது மனித எழுத்தாளர்களால் எழுதப்பட்டிருப்பினும், அனைத்தும் இறை ஏவுதலால் எழுதப்பட்டவை என்பதை நாம் ஏற்றுக்கொள்கின்றோம். திருவிவிலிய நூல்கள் ஆரம்பத்தில் பப்பிரஸ் என்னும் நாணல் தண்டுகளினால் அமைக்கப்பட்டு எழுதப்பட்டது. இதையே சுருள் ஏடு என அழைத்தனர். ஆரம்பத்தில் கல் வெட்டுக்களிலும் விலங்குகளின் தோலிலும் இறை வார்த்தை எழுதப்பட்டது. இவற்றை பாதுகாப்பதற்குப் பலவிதமான முறைகள் பயன்படுத்தப்பட்டன. ஆரம்பத்தில் எபிரேய மொழியில் எழுதப்பட்ட திருவிவிலியம் பின்னர் கிரேக்க மொழிக்கும் வேறு பல மொழிகளுக்கும் மொழிபெயர்க்கப்பட்டது.

**'பைபிள்'** என்ற சொல் 'பிப்ளோஸ்' என்னும் கிரேக்க சொல்லில் இருந்து பிரிந்து வந்த சொல் ஆகும். இதன் பொருள் **'புத்தகம்'** என்பதாகும் இவ்வாறு பல நூல்களைக் கொண்டு தொகுக்கப்பட்ட திருவிவிலியத்தை நாம் ஒரு நூல் நிலையம் என்றும் ஏற்றுக்கொள்வோம்.


படம் 18.2 சுருள்

ஆசிரியர்கள் பலரைக் கொண்டு எழுதப்பட்ட இந்த உன்னத நூலில் வரலாற்றுக் கதைகள், நீதிச் சட்டங்கள் அரச நிர்வாகம், இறைவாக்கினரின் வெளிப்பாடு, விசுவாசம், இலக்கியம், இறை எச்சரிக்கையின் போதனைகள் ஆகியன அடங்கியுள்ளன.

திருவிவிலியத்தில் இரு பெரும் பிரிவுகள் உண்டு. அவை பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும் ஆகும். கடவுளின் மூலமாக உலகம் படைக்கப்பட்ட செய்தியில் இருந்து ஆரம்பமாகி, பலவிடயங்களை உள்ளடக்கி, பழைய ஏற்பாடு விபரமாக எழுதப்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் பிறப்பு, கிறிஸ்துவின் பணி ஆதித் திருச்சபை வரலாறு போன்ற விடயங்கள் விபரமாக எழுதப்பட்டுள்ளது. எனவே, இறைவார்த்தையை எமக்கு வெளிப்படுத்துவது திருவிவிலி யமாகும். இது எமக்கு மிகவும் சிறந்த, புனிதமான நூலாக மதிக்கப் படுகின்றது.

ஆரம்பத்தில் எபிரேய மொழியில் எழுதப்பட்டிருந்த பழையஏற்பாடு, கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப்பட்டது. இயேசுவின் காலத்திற்குப் பின் புதிய ஏற்பாடு கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. அதற்குக்காரணம் உரோமப் பேரரசின் ஆட்சியின் கீழ் இருந்த பலஸ்தீனாவின் ஆட்சி மொழியாக கிரேக்க மொழி இருந்து வந்தது. அச்சு இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்ட பின் ஒரே புத்தகமாக திருவிவிலியம் எமது கைகளில் கிடைத்தது. உலகில் பல மொழிகள் பேசும் மக்களுக்கு அவர்களின் சுயமொழியில் திருவிவிலியத்தை வாசிப்பதற்கு எண்ணற்ற மொழிபெயர்ப்புக்கள் வெளிவந்தன. இன்று உலகிலேயே மிகவும் கூடுதலான மொழிபெயர்ப்புக்களில் வெளிவந்த ஒரே புத்தகம் திருவிவிலியமாகும். இதன் முக்கிய இருபகுதிகளான பழைய ஏற்பாட்டில் முப்பத்தொன்பது புத்தகங்களும் புதிய ஏற்பாட்டில் இருபத்தேழு புத்தகங்களும் அடங்கியுள்ளது.

திருவிவிலியத்தின் முதல் ஐந்து புத்தகங்களும் பஞ்சாகமங்கள் என அழைக்கப்படும். அதில் இஸ்ரயேலரின் வரலாறும் நிதிச் சட்டங்களும் அடங்கியுள்ளன. இரண்டாம் நூலான விடுதலைப்பயணம் எனப்படுவது எகிப்தில் குடியேறி அடிமைகளாகிய இஸ்ரயேல் மக்களை விடுதலை

செய்து அழைத்து சென்ற பயணம் விபரிக்கப்பட்டுள்ளது. இறைவாக்கு நூல்களில் இறைவன் பல சந்தர்ப்பங்களில் இறைவாக்கினரை அழைத்து மக்களுக்கு கொடுத்த இறைசெய்திகள் அடங்கியுள்ளன. வரலாற்றின் விபரங்கள் இலக்கிய நூல்களாக இருப்பதோடு தானியேலின் நூல் தரிசன நூலாக குறிப்பிடப்பட்டுள்ளது.




படம் 18.3
திருவிவிலியம்

திருவிவிலியத்தில் புதிய ஏற்பாட்டின் முதல் நான்கு புத்தகங்களும் நற்செய்திகளாக அறிமுகப்படுத்தப்படுகிறது. இயேசுவின் வாழ்வை பற்றிய கருத்துக்கள், மக்களுக்கு ஆற்றிய பணிகள், அவரின் பாடுகள், மரணம், உயிர்ப்பு அனைத்தும் உண்மையாக கிறிஸ்துவை பின்பற்றுபவர்கள் அறிந்திருக்கவேண்டிய பெறுமதியான கருத்துக்கள் ஆகும். அதைத் தொடர்ந்து வரும் திருத்தூதர் பணி நூலானது ஆதித்திருச்சபையின் வரலாறுகளைக் கூறுகின்றது. அடுத்து பல திருமுகங்களும் திருச்ச பைகளுக்கான போதனைகளாக அடங்கியுள்ளன. இவற்றில் அதிகமானவை பவுலினால் எழுதப்பட்டவைகள் ஆகும். இத்திருமுகங்கள் அன்று முதல் இன்று வரை எமது திருச்சபைக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சிறந்த போதனையையும் வழிக்காட்டுதலையும் பெற்றுத் தருகின்றது.

பழைய ஏற்பாடு எமக்கு முக்கியமானதாகும். அது இயேசு வின் பின்னணிக்கு ஏற்றதான இறைவார்த்தையும் அவரைப் பற்றிய இறைவாக்குகளையும் உள்ளடக்கி இருக்கின்றது. இயேசு பயன்படுத்தியதும் பழைய ஏற்பாட்டின் நூல்களாகும் அவர் தமது முதலாவது போதனைக்காக தெரிவு செய்ததும் எசாயா இறைவாக்கினரின் நூலாகும். அவ்வாறே நியாயப்பிரமாணங்களையும் நன்றாகக் கற்றறிந்து அவற்றை நிறைவேற்றவே வந்தேன் என்றார். மேலும் இயேசு தனக்கு ஏற்பட்ட சோதனைகளிலிருந்து வெற்றி பெறுவதற்கும் பழைய ஏற்பாட்டிலுள்ள இறைவார்த்தைகளையே பயன்படுத்தினார்.

இவற்றைப் பார்க்கும் போது, அவரைப் பின்பற்றுவோருக்கும் திருவிவிலியமானது புனித நூலாகும். அதில் எழுதப்பட்டவை இறை வார்த்தைகளாகும். எனவே சிறுவயது முதல் நாம் அதை வாசிப்பதற்கு பழகிக் கொள்ள வேண்டும். எமது வாழ்வில் நல்லவைகளை அறிந்து கொள்வதற்குச் சரியான வழிக்காட்டுதல் திருவிவிலியத்தில் கிடைக்கின்றது. நாம் இறைவனின் பிள்ளைகள் என்பதை உலகிற்கு எடுத்துக் காட்டுவதற்கு இறைவார்த்தைகள் மூலம் கிடைக்கும் தைரியமும், பெலனும் அளவிடப்பட முடியாதவையாகும்.

# திருவிவிலியம்

## பழைய ஏற்பாடு (39 புத்தகங்கள்)

**திருச்சட்டங்கள்**

1. தொடக்கநூல்
2. விடுதலைப்பயணம்
3. லேவியர்
4 எண்ணிக்கை
5. இணைச்சட்டம்

முக்கால இறைவாக்கு நூல்கள்

1. யோசுவா
2. நீதித்தலைவர்கள்
3. i சாமுவேல்
4.ii சாமுவேல்
5.i அரசர்கள்
6.ii அரசர்கள்

**பிற்கால இறைவாக்கு நூல்கள்**

**பெரிய இறைவாக்கினர்**

1. ஏசாயா
2. எரேமியா
3. எசேக்கியேல்

**சிறிய இறைவாக்கினர்**

1. ஓசேயா
2. யோவேல்
3. ஆமோஸ்
4. ஒபதியா
5. யோனா
6. மீக்கா
7. நாகூம்
8. ஆபகூக்
9. செப்பனியா
10. ஆகாய்
11. செக்ரியா
12. மலாக்கி

**எழுத்தேடுகள்**

**இலக்கியம்**

1. ரூத்
2. எஸ்தர்
3. யோபு
4. திருப்பாடல்கள்
5. நீதிமொழிகள்
6. சபை உரையாடல்
7. இனிமை மிகு பாடல்
8. புலம்பல்

**வரலாறு**

1. குறிப்பேடு
2. குறிப்பேடு
3. எஸ்ரா
4. நெகேமியா

**மறைபொருள் இலக்கியம்**

தானியேல்

## புதிய ஏற்பாடு (27புத்தகங்கள்)

**நற்செய்திகள்**

1. மத்தேயு
2. மாற்கு
3. லூக்கா
4. யோவான்

**வரலாறு**

திருதூதர்பணிகள்

யோவானுக்கு வெளிப்படுத்திய திருவெளிப்பாடு

**திருமுகங்கள்**

1. ரோமர்
2. கொரிந்தியர்
3.2 கொரிந்தியர்
4. கலாத்தியர்
5. எபேசியர்
6. பிலிப்பியர்
7. கொலோனசயர்
8.1 தெசலேனிக்கேயர்
9.2 தொசலேனிக்கேயர்
10.1 திமோத்தேயு
11.2 திமொத்தேயு
12. தீத்து
13. பிலமோன்

**பொதுத்திருமுகம்**

1. எபிரேயர்
2. யாக்கோபு
3.1 பேதுரு
4.2 பேதுரு
5.1 யோவான்
6.2 யோவான்
7.3 யோவான்
8. யூதா

மனனவசனம்
திருப்பாடல் *119:89*

**ஆண்டவரே என்றென்றைக்கும் உள்ளது உமது வாக்கு ;**
**விண்ணுலகைப்போல் அது நிலைத்துள்ளது.**

செயற்பாடு

1. பஞ்சாகமத்தில் அடங்கும் ஐந்து நூல்களையும் புதிய ஏற்பாட்டின் நான்கு நற்செய்தி நூல்களையும் பயிற்சிப் புத்தகத்தில் எழுதுக.

2. திருவிவிலிய நூல்களின் அட்டவணையை வகுப்பறையில் காட்சிப்படுத்துவதற்கு முன் வையுங்கள். குழுக்களாகப் பிரித்து பல பகுதிகளை எழுதி வர்ணம் பூசச் செய்யுங்கள்.

# 19 இறை வார்த்தையில் வழிகாட்டல்

**முன்னைய பாடங்களில் திருவிவிலியமானது கிறிஸ்தவர் களாகிய எமது புனித நூல் என்பதனையும் அவற்றின் ஒழுங்கமைப்பு முறைகளையும் அறிந்தோம். அது ஒரு வரலாற்று நூல் மட்டும் அல்ல அதில் அடங்கியுள்ளவை யாவும் இறை வார்த்தைகளாகும்.**

**முழு திருவிவிலியமும் கிறிஸ்தவரான எமது வாழ்வை ஒளியாக்கி நல்ல முறையில் நடத்திச் செல்வதற்கு வழிகாட்டு கின்றது. ஆனால் அதில் உள்ளடங்க வேண்டியவற்றை முன் வைக்கும் அவசியத்தைக் கவனத்தில் கொண்டு பழைய ஏற் பாட்டில் கடவுள் மோசே மூலமாக பெற்றுத் தந்த சட்டங்களும் புதிய ஏற்பாட்டில் மத்தேயு நற்செய்தியில் அடங்கியுள்ள மலைப்பொழிவின் போதனைகளும் கிறிஸ்தவர்களான எமது வாழ்க்கைக்கு தரும் வழிகாட்டலை தியானிப்போம்.**

திருவிவிலியத்தின் முதலாவது நூலான தொடக்க நூலிலிருந்து இறுதி நூலான திருவெளிப்பாடு வரையும் ஒன்றுக்கொன்று தொடர்பான கருத்தைக் கொண்டது. அதாவது கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையிலான தொடர்பாகும்.

தொடக்கநூலின் மூலமாக கடவுள் மண்ணுலகைப் படைத்து மனிதனையும் படைத்தார். அனைத்து செல்வங்களும் நிறைந்த பரிபூரணமான உலகை மனிதனுக்கு கொடையாக அளித்தார். ஆனால் ஆதாமும் ஏவாளும் கடவுளின் கட்டளைக்குக் கீழ்படியாமல் பாவத்திற் குள்ளாயினர். அதில் இருந்து முழுமனித வர்க்கமும் கடவுளின் கட்டளையை மறந்து கீழ்ப்படியாமல் செயல் பட்டமையும், கடவுள் இறைவாக்கினர் மூலமாகப்பேசி அந்நிலையில் இருந்து மனிதனை விடுவிப்பதற்கு முயற்சிசெய்த விதத்தினை திருவிவிலியத்தின் நூல்கள் வெளிப்படுத்துகின்றன.

அவ்வாறான நிலையில் இருந்த மனிதனை மீண்டும் தன்னிடம் சேர்த்துக் கொள்வதற்காக கடவுள் மோசேயின் தலைமைத்துவத்திற்கூடாக

அவரின் நீதிச்சட்டங்களை மக்களுக்கு வழங்கினார். அதில் அடங்கியுள்ள பத்து கற்பனைகள் அன்று போல இன்றும் கிறிஸ்தவர்களாகிய எமது வாழ்வுக்கு உறுதுணையாக உள்ளது. எகிப்து தேசத்தின் அடிமைத்தனத்தில் இருந்து மீட்கப்பட்டு வாக்களிக்கப்பட்ட நாட்டை நோக்கி அழைத்துச் செல்லப்பட்ட இஸ்ரயேல் மக்களுக்குச் சரியான வழிகாட்டுதலை பெற்றுக்கொடுத்த அவ் இறைக்கட்டளை அன்று போல இன்றும் எமக்கு நல்வாழ்வு வாழ்வதற்கு உதவுகின்றது. கடவுளுடனான தொடர்பை ஏற்படுத்திக்கொள்வதற்கும், நாம் ஒருவரோடு ஒருவர் நல்வாழ்வு வாழ்வதற்கும், பத்து கற்பனைகள் மூலம் எமக்கு வழிகாட்டுதல் கிடைக் கின்றது.




| **கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையிலான தொடர்பு** | **மனிதனுக்கும்மனிதனுக்கும் இடையிலான தொடர்பு** |
| --- | --- |
| 1. என்னைத்தவிர வேறு தெய்வங்கள் உனக்கிருத்தல் ஆகாது<br>2. சிலைகளை வழிபட வேண்டாம்<br>3. உன் கடவுளாகிய ஆண்டவரின் பெயரை வீணாகப் பயன் படுத்தாதே<br>4. ஓய்வு நாளை புனிதமாக கடைப்பிடிக்க முயல்வாயாக | 5. தந்தையையும் தாயையும் மதித்து நட.<br>6. கொலை செய்யாதே.<br>7. விபச்சாரம் செய்யாதே.<br>8. களவு செய்யாதே.<br>9. பிறருக்கு எதிராக பொய்ச் சான்று சொல்லாதே.<br>10.பிறருக்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே. |
| இறை பயத்தோடு கடவுளுடன் தொடர்பு கொள்வதற்கு மேலுள்ள கட்டளைகள் பொருத்தமாகும் | மனிதர்களுக்கிடையே நல்லுறவை பேண மேலுள்ள கட்டளைகள் பொருத்தமாகும். |

**புதிய ஏற்பாட்டின் மலைப்பொழிவின் போதனைகள் எமது கிறிஸ்தவ வாழ்வை நல்ல முறையில் நடத்துவதற்கு கிடைக்கும் வழிகாட்டலாகும் .**




இயேசு, கிறிஸ்தவர்களான எம்மை மண்ணுலகின் உப்பாகவும் உலகிற்கு ஒளியாகவும் ஒப்பிடுகிறார். உப்பில்லா உணவு சுவையற்றது. எனவே நாம் பிறரின் வாழ்வை நலமுள்ளதாக மாற்றுவதை அவர் எம்மிடம் எதிர்பார்க்கின்றார். 'நீங்கள் உலகிற்கு ஒளியாய் இருக்கிறீர்கள்' இயேசு இவ்வுலகிற்கு வந்தது பாவத்தால் நிறைந்த உலகையும் சமுதாயத்தால் ஒதுக்கப்பட்ட மக்களின் வாழ்வையும் ஒளியாக்குவது இதன் கருத்தானது. எம்மையும் எமது வாழ்வையும் பிறரின் இருளான வாழ்வை ஒளியாக்குவதில் ஈடுபடுத்திக் கொள்வோம்.




அன்றைய யூத சமுதாயத்தில், தனக்கு எதிராக ஒருவர் தவறு செய்தால் தவறு செய்தவரை பழி வாங்கினர். அதாவது கண்ணுக்கு கண் பல்லுக்குப் பல் எனும் செயற்பாடு வழக்கத்தில் இருந்தது. ஆனால் கிறிஸ்தவ பிள்ளையாக பழிக்குப்பழி வாங்காமல், தவறு செய்வோரை அன்போடு ஏற்றுக் கொள்ளுமாறு இயேசு கூறினார். அதுவே கிறிஸ்தவர்களின் முன்மாதிரியாகும். எதிர்கால சமுதாய சவால்களுக்கு முகம் கொடுக்கும் நீங்கள் செய்யவேண்டியது பழிவாங்குவதற்குப் பதிலாகத் தயவையும் அன்பையும் காண்பிக்கவேண்டும்.




'உங்கள் பகைவரிடம் அன்பு கூறுங்கள்; உங்களைத் துன்புறுத்துவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள்.' எமக்கு எதிராக ஒருவர் தீமை செய்தால், அவ்விடத்தில் நாம் கிறிஸ்தவ அன்பை வெளிப்படுத்த வேண்டும். ஏனெனில், இயேசு அனைவரையும் அன்பு செய்தார். அவருக்குத் தீமை செய்தவர்களுக்காக இறைவனிடம் மன்னிப்பு வேண்டினார். இன்றைய சமுதாயத்தில் வாழும் எமக்கு, இவ்வாறு செய்வது கடினமான காரியமாக இருக்கலாம். ஆனால், அவ்வாறு செயற்பட இயேசு எமக்கு கிருபை செய்வாராக.




ஜெபம் என்பது கிறிஸ்தவ வாழ்க்கையில் மிக முக்கியமான ஆயுதமாகும். எம்மோடு வாழும் இறை தந்தையோடு நாம் பேசுவதற்கும் அவருக்கு செவி கொடுப்பதற்குமான ஒரு சந்தர்ப்பமாகும். ஜெபத்தின் போது கடவுளைத் துதிக்கவும், கடவுளுக்கு நன்றி கூறவும், மன்னிப்பு கேட்கவும் பிறருக்காக விண்ணப்பிக்கவும், எமது தேவைகளுக்காக மன்றாடவும் எமக்கு சந்தர்ப்பம் கிடைக்கின்றது. நாம் செய்யும் ஒவ்வொரு தவறுக்கும் கடவுளிடம் இருந்து எமக்கு மன்னிப்பு கிடைக்கவேண்டுமானால், முதலாவதாக எமக்கு எதிராக தவறு செய்தவர்களை நாம் மன்னிக்க வேண்டும். அப்போது மட்டுமே எமக்கு கடவுளின் மன்னிப்பு கிடைக்கும். நீங்கள் வீட்டிலோ பாடசாலையிலோ நண்பர்களோடு இருக்கும் சந்தர்ப்பங்களிலோ அவர்கள் உங்களுக்கு ஏதும் தவறு செய்திருப்பின் நீங்கள் அவர்களை மன்னிக்க வேண்டும். இது கிறிஸ்தவ குணதிசயமாகும்.

ஜெபமானது நீண்ட விளக்கத்தை கொடுப்பதல்ல. இலகுவான சில வார்த்தைகளால் வேண்டிய இடத்தில் வேண்டிய நேரத்தில் உங்களுக்கு இயேசுவோடு கதைக்க முடியும். ஜெபம் இறை அரசின் பிரஜைகளின் வாழ்வில் முக்கியமான அம்சமாகும். நாம் வாழ்வதற்கு சுவாசிப்பது எவ்வளவு முக்கியமோ, அவ்வாறு ஆன்மீக வாழ்வுக்கு ஜெபம் மிகவும் அவசியமாகும்.



**வாசிப்போம்**
**மத்தேயு 6-25**

பலவற்றைக் குறித்து கவலைப்படுவதைப் பற்றி இயேசுவின் எச்சரிக்கையாக அமைவது உயிர் வாழ எதை உண்பது? எதைக்குடிப்பது? என்றோ உடலுக்கு எதை உடுத்துவதென்றோ? கவலை கொள்ளாதிருத்தல் ஆகும். வானத்து பறவைகளைக் கூட கவனித்துக்கொள்ளும் விண்ண கத்தந்தை எங்களைப் பாதுகாத்துத் தேவையான அனைத்தையும் தருவார். நாம் கவலைப்படும் சந்தர்ப்பங்களில் இவ்வாறுதலான வார்த்தைகள் எம்மைத் தேற்றும்.

எமக்கு தேவையான அனைத்தையும் தந்து, எம்மை அன்பு செய்து மன்னிப்பு அளித்து ஏற்றுக்கொள்ளும் ஜீவனுள்ள ஆண்டவர் இருக்கிறார் என்பது உண்மை. அன்று போல இன்றும் என்றும் எதிர்க்காலத்திலும் சரியான வழியைக் காட்டும் திருவிவிலியம் எமது புனித நூலாகும் என்பதனை ஏற்றுக்கொள்வோம்.

மனனவசனம்
திருப்பாடல் *46-1*

"கடவுள் நமக்கு அடைக்கலமும் ஆற்றலுமாய் உள்ளார். இடுக்கணுற்ற வேளைகளில் நமக்கு உற்ற துணையும் அவரே."

செயற்பாடு

1. திருவிவிலியத்தில் பத்து கட்டளைகளில் ஐந்தாவது கட்டளையை எழுதுக.
2. கடவுளிடம் நாம் மன்னிப்பைப் பெறுவதற்காக நாம் செய்ய வேண்டிய நிபந்தனை என்ன என்பதை எழுதுக.

# 20 தாவீது

***படைப்பாளராகிய கடவுள் எமது ஆயர் (மேய்ப்பர்) என்பதை நாம் அறிவோம். நாம் நன்கு அறிந்த 23 ஆம் திருப் பாடல் மேய்ப்பாராக இருந்த தாவீதினால் எழுதப்பட்டது. என்பதை நாம் ஏற்றுக்கொள்வோம். அவ்வாறு பொருளுள்ள திருப் பாடலை எழுதுவதற்கு வேண்டிய திறமையை தாவீது எப்படிப் பெற்றார். தனது மேய்ப்புப் பணியில் கடவுளைப்பற்றிய அனுபவங்கள் பலவற்றைப் பெற்றதனாலேயாகும். கடவுளில் முழு நம்பிக்கையை வைத்து வளர்ந்த மேய்ப்பனாகிய தாவீது, மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து துணிச்சல் மிகுந்த இஸ்ரயேலின் அரசனாக திருப்பொழிவு பெற்றார்.***

பெத்லகேமில் வாழ்ந்த மந்தை மேய்ப்புத் தொழிலைச் செய்த ஈசாய் என்னும் இஸ்ரயேலனுக்கு எட்டு புதல்வர்கள் இருந்தனர். அவர்களுள் இளையவனான தாவீது, சிறுவயதுமுதல் தனது தந்தையின் மந்தையை மேய்த்து வந்தார். சிறுவயதுமுதல் கடவுளை நேசித்த தாவீது, மந்தைகளை சமவெளியில் மேய்க்கும்போது அவற்றை வனவிலங்குகளிலிருந்து காப்பாற்ற துணிவுடன் செயல்பட்டார். இந்த அனுபவத்தின் மூலம் தாவீது கடவுளின் அன்பைப் பற்றியும் நன்கு விளங்கிக் கொண்டான். கற்களையும் கவணையும் கொண்டு வனவிலங்குகளை விரட்டியடிப்பதற்கு குறிதவறாது செயல்படும் திறமையைக் கொண்டிருந்தார். அத்தோடு யாழ் மீட்டுவதிலும் கைதேர்ந்த வனாயிருந்தான். கடவுளில் மிகுந்த நம்பிக்கை வைத்து கடவுளுக்கு அஞ்சி வாழ்ந்தார்.

ஈசாயின் மூத்தபுதல்வர்கள் மூவர் சவுலின் படையில் சேர்ந்திருந் தார்கள். ஏலா பள்ளத்தாக்கில் பெலிஸ்தியருடன் அவர்கள் போரிட்டுக் கொண்டு இருக்கும் போது ஒருநாள் தனது புதல்வர்களைக் குறித்த தகவலைப் பெற்றுவரும்படி ஈசாய் தாவீதை அனுப்பினார். அங்கு பெலிஸ்தியரின் படையையும், இஸ்ரயேலரின் படையும் போரிட்டுக் கொண்டு இருப்பதை தாவீது கண்ணுற்றார். பெலிஸ்தியரின் படையில் இருந்த கோலியாத்து என்னும் வீரன் இஸ்ரயேலரை நித்தமும் அச்சுறுத்தி,

அவர்களுடைய கடவுளை ஏளனப்படுத்திக் கொண்டு இருந்தான். தாவீது இதை சகித்துக்கொள்ளமுடியாமல் கோலியாத்து என்னும் வீரனுக்கு சவால்விட தீர்மானித்தார். தாவீது அங்கிருந்தவர்களிடம் வின வியதையும் அவர் கூறியவற்றையும் சவுலுக்கு அறிவித்தார்கள்.




தாவீது : அரசனே! அவன் பொருட்டு யாருடைய இதயமும் கலங்க வேண்டியதில்லை. உம் அடியானாகிய நானே சென்று அந்த பெலிஸ்தியனோடு போரிடுவேன்.

சவுல் : இந்தபெலிஸ்தியனை எதிர்த்துப் போராட உன்னால் இயலாது நீயோ இளைஞன், ஆனால் அவனோ தன் இளவயது முதல் போரில் பயிற்சி உள்ளவன்.

தாவீது : உம் அடியானாகிய நான் என் தந்தையின் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும் போது சிங்கமோ அல்லது கரடியோ மந்தையில் புகுந்து ஆட்டைப் பிடித்துக் கொண்டு ஓடினால், நான் பின் தொடர்ந்து ஓடி, அதை அடித்து, அதன் வாயினின்று ஆட்டை விடுவிப்பேன். அது என் மீது பாய்ந்தால் அதன் தாடியைப் பிடித்து நன்றாக அடித்துக் கொல்வேன்.

இவ்வாறாக கோலியாத்தின் சவாலை ஏற்றுக்கொண்ட தாவீதுக்கு சவுல் தனது உடைகளை அணிவித்தார். தாவீது தான் அவற்றிற்குப்பழக்கப்படாததால் அவற்றை களைந்துவிட்டார். தாவீது தம்கோலை கையில் எடுத்துக்கொண்டு, ஆற்றங்கரையில் வழுவழுப்பான ஐந்து கூழாங்கற்களையும், கவணையும் கையில் எடுத்துக்கொண்டார். கோலியாத்தின் சவாலைக் கண்டு முழு இஸ்ரயேல் படையும் அஞ்சி நின்றாலும் தாவீது பயமற்றவராக இருந்தார். கடவுள் மீது கொண்டிருந்த நம்பிக்கையினி மித்தம் தாவீது பயமற்றவராக கோலியாத்து என்னும் வீரன் முன் நின்றார்.

பெலிஸ்தியனான கோலியாத்து தாவீதை ஏளனம் செய்து கொண்டு சிறிதுசிறிதாக முன்நோக்கி நகர்ந்தான். தனதுகரங்களால் சிறுவனான தாவீது சந்திக்கப்போகும் அழிவைக் குறித்து பெருமைப்பட்டுக்கொண்டான்.

கோலியாத்து : ''நீ கோலுடன் என்னிடம் வர நான் என்ன நாயா? அருகேவா! வானத்துப் பறவைகளுக்கும் வனத்து விலங்குகளுக்கும் உன் உடலை இரையாக்குவேன்''.

தாவீது : ''நீ வாளோடும் ஈட்டியோடும் எறி வேலோடும் என்னிடம் வருகிறாய் ; நானோ நீ இகழ்ந்த இஸ்ரயேலின் படைத்திரளின் கடவுளாகிய, படைகளின் ஆண்டவர் தம் பெயரால் வருகிறேன். இன்றே ஆண்டவர் உன்னை என் கையில் ஒப்புவிப்பார் நான் உன்னை வீழ்த்தி உன் உடலைத் துண்டிப்பேன். பெலிஸ்தியரின் பிணங்களை வானத்துப் பறவைகளுக்கும் பூவுலக விலங்குகளுக்கும் கையளிப்பேன். இஸ்ரயேலரிடையே கடவுள் இருக்கிறார் என்பதை உலகிலுள்ள எல்லாரும் இதனால் அறிந்து கொள்வர். மேலும், ஆண்டவர் வாளினாலும் ஈட்டியினாலும் மீட்கின்றவர் அல்லர் என்று இந்த மக்கள் கூட்டம் அறிந்து கொள்ளட்டும். ஏனெனில் இது ஆண்டவரின் போர்! அவரே உங்களை எங்கள் கையில் ஒப்புவிப்பார்.

தாவீதின் வார்த்தைகளால் ஆத்திரமுற்ற கோலியாத்து, தாவீதைக் கொல்ல வேண்டும் என்ற உத்வேகத்தோடு முன்நோக்கி வேகமாக நடந்தான். தாவீது பொறுமையோடு தனது பையிலிருந்து ஒரு கல்லை எடுத்து அதனை கவணில் வைத்து பெலிஸ்தியனின் நெற்றியைக் குறிபார்த்து அதை சுழற்றி எறிந்தார். அந்தக் கல் அவனது நெற்றியில் பதியவே அவன் தரையில் முகம் குப்புற விழுந்தான். இவ்வாறு கோலியாத்து தாவீதுக்கும் அவருடைய கடவுளுக்கும் எதிராக உரைத்த ஏளன வார்த்தைகள் முடிவுற்றது.

**நாம் சிறுவயது முதல் அன்புள்ளவர்களாகவும் கடவுள் நம்பிக்கை உள்ளவர்களாகவும் வளர வேண்டும். அப்போது பயமற்றவர்களாக சவால்களை மேற்கொள்ளலாம்.**

போருக்குத் தேவையான அனைத்து கவசங்களுடனும் காணப்பட்ட பெலிஸ்தியவீரன் தன்னில் முழு நம்பிக்கையையும் வைத்திருந்தான். வெளிவாரியான கவசங்களை தாவீது களைந்து; மேய்ப்பனைப் போல் சர்வவல்லமையுள்ள கடவுளில் நம்பிக்கைவைத்தார்.

**தனதுசக்தியையும் திறமையையும் காண்பித்து புகழ் பெறுவதையே கோலியாத்து விரும்பினான். தாவீது கடவுள் மீது தனது முழு நம்பிக்கையையும் வைத்தார்.**

கோலியாத்தின் நோக்கம் மக்கள் வாழ்வை அழிப்பதாகும். தாவீது சவாலை எதிர்நோக்கும் போது மக்கள் வாழ்வைக் காப்பாற்றுவதே நோக்கமாக இருந்தது.

**தாவீது தீமையை மேற்கொள்வதற்கு கடவுளின் வல்லமையை முழுமையாக நம்பியிருந்தார்**

**கடவுளின் பிள்ளையாகிய நீர் கடவுளுக்கு செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன. அதற்காகப் பல்வேறு திறமைகளை கடவுள் உமக்குத் தந்திருக்கிறார். அவற்றை வளர்த்து, துணிவுடன், கடவுளுக்குக் கீழ்படிந்து வாழ்வது சிறந்தது.**

*மனனவசனம்:*
***திருப்பாடல் 111:7***

**அவர்தம் ஆற்றல்மிகுசெயல்கள் நம்பிக்கைக்குரியவை ; நீதியானவை ; அவர்தம் கட்டளைகள் அனைத்தும் நிலையானவை.**

செயற்பாடு

1. நீர் பெற்றுள்ள சிறப்பான திறமை ஒன்றைத் தெரிவு செய்து, அதைக்கடவுளின் மகிமைக்காக

i) உமது திருச்சபையில்
ii) உமது சமூகத்தில்
iii) உமது குடும்பத்தில்

பயன்படுத்தி எவ்வாறு சேவை செய்வீர் என்பதை குறிப்பிடுக.

2. இந்தப்பாடத்தில் தரப்பட்டுள்ள உரையாடலைப் பயன்படுத்தி வகுப்பில் நடித்துக்காட்டவும்.

# 21 மிரியம்

**இறைபற்றுடையவராக தீமையை மேற்கொண்ட தாவீதின் துணிச்சலான செயற்பாட்டின் மூலம் அவர் எமக்கு முன்மாதிரியாக அமைந்துள்ளதை நாம் கடந்த பாடத்தில் அறிந்து கொண்டோம். இஸ்ரயேல் குடும்பமொன்று எகிப்தில் துன்பத்தை எதிர்நோக்கிய போது அக்குடும்பத்தின் பெண்பிள்ளை துணிச்சலுடன் செயற்பட்டு அந்நிலைக்கு முகம்கொடுத்ததை இப்பாடத்தில் நாம் அறிந்துகொள்வோம். அதன் மூலம் எமது குடும்பங்களில் ஆற்றப்படக்கூடிய நமது வகிபங்கை அறிந்து கொள்வோம்.**

பழைய ஏற்பாட்டுக்காலத்தில் யாக்கோபின் குடும்பத்தினர் பலஸ்தீனாவில் பெரும் பஞ்சமொன்றை எதிர்நோக்கியபோது அவர்கள் எகிப்துக்கு சென்று அங்கு குடியேறினார்கள். அங்கு வாழ்ந்த காலத்தில் இக்குடும்பம் எண்ணிக்கையில் வளர்ச்சியுற்றது. எகிப்தின் பார்வோன் பெருகிவரும் இஸ்ரயேலரின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த பல உபாயங்களை மேற்கொண்டான். ஆனாலும் அவை பயனளிக்கவில்லை. இறுதியாக, இஸ்ரயேலருக்குப் பிறக்கும் ஆண்குழந்தைகள் அனைவரும் நைல் நதியில் வீசப்பட வேண்டும் என்ற கட்டளை பிறப்பித்தான். இஸ்ரயேலர்கள் எகிப்தில் எபிரேயர் என்றே அழைக்கப்பட்டனர்.

எகிப்தில் வசித்த லேவி கோத்திரத்தைச் சேர்ந்த அம்ரம் மற்றும் யாக்கோபெத் ஆகியோருக்கு ஆரம்பத்தில் இரு பிள்ளைகள் இருந்தனர். மூத்தசகோதரன் ஆரோன், இளைய சகோதரி மிரியம். பார்வோனின் இக்கட்டளை நடைமுறையில் இருக்கும் காலத்தில் இக்குடும்பத்திற்கு இன்னுமொரு ஆண்குழந்தை பிறந்தது. இதன்விளைவாக பார்வோனிடமிருந்து இச்சிறு குழந்தையைப் பாதுகாக்க வேண்டியபெரும் சவாலை இக்குடும்பம் சந்தித்தது. அவ்வேளை இக்குடும்ப அங்கத்தவர்கள் செயற்பட்ட விதத்தை நாம் பார்ப்போம்.




*யாக்கோபெத்* : *மிரியம், இதோபார்! உனது தம்பி சற்று வளர்ந்து பெரியவனாகிறான். இப்போது அவன் அழும் சத்தம் வெளியிலும் கேட்கிறது. தொடர்ந்தும் இந்தக் குழந்தையை நாம் ஒளித்து வைத்திருப்பது மிகவும் சிரமமான காரியமாகும். போர்வீரர்கள் வந்துவிட்டால்.....*

*மிரியம்* : *அம்மா! எமது இந்த சிறுதம்பியை எப்படி காப்பாற்றுவோம்? அப்பா! நாம் பார்த்துக்கொண்டு இருக்கமுடியாது. தம்பி அழுகிறான். வெளியில் எவராவது கேட்டு விட்டால்....... வந்து தம்பியை எடுத்துச் சென்றுவிடுவார்களே.*

*யாக்கோபெத்* : *நாம் கோரைப் புல்லால் பேழை ஒன்றை செய்து தம்பியை அதனுள் வைத்து நதியோரத்தில் பாதுகாப்பாக வைத்திடுவோம். அப்போது அவன் அழுதாலும் எவருக்கும் கேட்காது.*

*மிரியம்* : *ஆம், அம்மா சொல்வதன்படி செய்வோம். நான் சென்று கோரைப் புற்களை எடுத்துவருகிறேன்.*

**தமது சகோதரன் மீது இருந்த பாசத்தின் விளைவாக அண்ணாவும் அக்காவும் செயல்படல்**



படம் 21.1 மிரியம் கோரைப்புற்களை கொண்டு செல்லல்

யாக்கோபெத் : (கோரைப்புற்களில் பேழையைசெய்ய ஆரம்பித்ததும் எல்லோரும் அவருக்கு உதவிசெய்தனர்)

**பெட்டியை கவனமாக செய்தல்.**

மிரியம் : நாம் தம்பிக்குபால் கொடுத்துவிட்டு பேழையில் வைப்போம்.

யாக்கோபெத் : இப்போது வைக்கமுடியாது. ஆற்றோரத்தில் வைத்தால் இந்த இடைவெளிகளுக்கூடாக தண்ணீர் உள்ளேவரும். அதைத் தடுக்க நிலக்கீல் பூசவேண்டும்.

*(மிரியமும் ஆரோனும் நிலக்கீலை எடுத்துவந்து பேழையின் அடிப்பாகத்தில் பூசி இடைவெளிகளை அடைத்தனர்).*

யாக்கோபெத் : மகள், தம்பியை இப்போது பெட்டியில் வை. நாம் கவன மாக சென்று வைத்து விட்டு வருவோம்.

**சகோதர பாசத்தினால் தம்பியைக் காப்பாற்ற மிரியம் முன்வரல்**

மிரியம் : அம்மா! நான் புற்புதர்களில் ஒளிந்து தம்பியைக் கவனித்துக் கொள்கிறேன்.



படம் 21.2 மிரியம் மறைத்து வைத்தல்

மிரியம் இவ்வாறாக தம்பியைப் பார்த்துக்கொண்டு இருக்கும் போது ஒரு புதுமையான சம்பவம் நடைப் பெற்றது. பார்வோனின் மகள் தனது தோழியரோடு நீராடுவதற்கு ஆற்றிற்கு வந்தார். அவர் நீராடிக்கொண்டு இருக்கும் போது தோழிகள் ஆற்றோரத்தில் மேலும் கீழும் உலாவிக்கொண்டிருந்தனர். அரச குமாரி பெட்டியைப் பார்த்து அதைஎடுத்து வரும்படி தனது தோழி ஒருவருக்கு கட்டளையிட்டார்.

அரசகுமாரியைப் பார்த்த மிரியம் தன்னை தைரியப் படுத்திக் கொண்டாள்.

அரசகுமாரி: எவ்வளவு அழகானகுழந்தை இது! பசியாய் இருக்கும் போல்..... அழுகின்றதே. இந்தக் குழந்தையை நான் பாதுகாக்க வேண்டும். யார் இந்த குழந்தைக்கு பாலூட்டுவார்?

ஒளிந்திருந்த மிரியம் துணிவோடு அரச குமாரியிடம் வந்தாள்

மிரியம் : அரசகுமாரி! உமக்குப் பதிலாக இந்த குழந்தையை வளர்க்க செவிலி ஒருத்தியை அழைத்து வரட்டுமா?

மிரியம் தனது தம்பியை வளர்க்க உதவி செய்வதற்கு முன்வந்தாள்

அரசகுமாரி : அது பெரிய உதவியாக இருக்கும்.

மிரியம் : நான் ஓடிப்போய் பாலூட்டும் தாய் ஒருவரை அழைத்துவருகின்றேன்.

> மிரியமின் துணிவும் உண்மையான பாசமும் தம்பியின் கொடூர மரணத்தைத் தடுத்தது. இது எமக்கும் சிறந்த முன் உதாரணமாகும்.

அரசகுமாரி: குழந்தைக்கு பாலூட்டதாய் ஒருவரை அழைத்து வந்ததற்காக உனக்கு மிக்க நன்றி. இந்த குழந்தைக்கு பாலூட்டி வளர்த்து சிறிது பெரியவனானதும் எனது மாளிகைக்கு அழைத்து வாருங்கள்

யாக்கோபெத்: ஆம் குமாரியே! உங்களது விருப்பப்படியே செய்கின்றேன்.

அரசகுமாரி : நான் நீரிலிருந்து இவனை எடுத்தேன். எனவே இந்த குழந்தைக்கு மோசே என்று பெயரிடுகிறேன்.

இவ்வாறாக கடவுளின் பாதுகாப்பைப் பெற்றுவளர்ந்த மோசே, பிற்காலத்தில் எகிப்தில் அடிமைத்தனத்தில் வாழ்ந்த மக்களை விடுவிக்க தலைமைத்துவத்துடன் செயற்பட்டார். அப்பங்கை அவர் இறைவனின் அழைப்பினால் பெற்றுக்கொண்டார்.

இந்தப் பாடத்தில் நாம் சந்தித்த சிறுமி, எல்லா கிறிஸ்தவ பெண்களுக்கும் முன்மாதிரியாக அமைகின்றார். எமது குடும்பங்களிலும் நாம் சகோதர அன்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். எமது நாட்டிலும் குடும்பங்களிடையே தடைகள் ஏற்படுத்துவோரைத் தடுத்து அன்பையும் ஐக்கியத்தையும் வளர்க்கவேண்டும்.

***மனனவசனம்:***
***விடுதலைப்பயணம் 2:10***

'நீரிலிருந்து நான் இவனை எடுத்தேன்' என்று கூறி அவள் அவனுக்கு மோசே என்று பெயரிட்டாள்.

செயற்பாடு

1. மிரியம் தன் சகோதரனைக் காப்பாற்றுவதற்கு எடுத்த நடவடிக்கைகளை எழுதுக.

2. உங்களுடைய வீட்டில் சகோதர சகோதரிகளின் நலனுக்காக எடுக்கக்கூடிய 5 நடவடிக்கைகளை எழுதுக

# 22 சாமுவேல்

கடவுளுடைய சத்தத்தை தனது சிறுவயதில் செவிமடுத்த ஒரு பிள்ளையைப் பற்றி இப்பாடத்தில் நாம் கற்போம். சிறுவராகிய நீங்களும் கடவுளுடைய சத்தத்தைக் கேட்பீர்கள் என்பது நிச்சயமாகும். கடவுளுடைய சத்தத்தைக் கேள்வியுறும் நீங்கள் அதற்கு ஏற்ற பிரதி நடத்தையைக் காண்பிப்பதற்குத் தேவையான வழிகாட்டலை இப்பாடத்தின் மூலம் பெறுவீர்கள். நீங்கள் உடலிலும் அறிவிலும் வளரும் அதே வேளையில் கடவுளையும் அறிந்து கொள்ள முயற் சிக்கவும். கடவுளுடன் உங்களுடைய தொடர்பு வலுப்படும் போது நீங்கள் கடவுளுடைய சத்தத்தை செவிமடுப்பீர்கள்.




யூதர்களாகிய எல்கானா, அன்னா ஆகியோர் ராமாவில் வாழ்ந்தார்கள். அன்னாவுக்கு குழந்தைகள் இல்லாததினால் அவர் மிகவும் கவலையுற்றிருந்தார். அதனால் அவர்கள் வருடந்தோறும் சீலோவில் இருந்த ஆலயத்துக்கு சென்று மன்றாடினர். அன்னா கண்ணீர்விட்டு, மிகுந்த இறை நம்பிக்கையோடு ஆண்மகவு ஒருவர் தனக்குகிடைக்க வேண்டும் என்று இறைவேண்டலில் ஈடுபட்டிருந்தார். அத்தோடு அந்தமகனை இறைபணிக்கு அர்ப்பணிப்பதாகவும் பொருத்தனை செய்திருந்தார். அவருடைய கண்ணீரைக் கண்ட சீலோ தொழுகைக்கூட குரு ஏலி, கடவுள் அவருடைய மன்றாட்டிற்கு பதில் கொடுப்பார் என்ற நம்பிக்கையைக் கொடுத்தார்.

அவர்களுடைய நம்பிக்கை கைகூடி, அன்னா ஒரு ஆண்மகவைப் பெற்றெடுத்து, அவருக்கு சாமுவேல் என்று பெயரிட்டார். ''கடவுளிடம்

கேட்டுக்கொண்டது'' என்பது அப்பெயரின் பொருளாகும். அன்னா வாக்குக் கொடுத்தபடி சிறுவயதிலேயே சாமுவேலை சீலோ தொழுகைக் கூடத்தில் பணிக்கென அர்ப்பணித்து ஒவ்வொரு வருடமும் தனது மகனைப் பார்வையிட சீலோவுக்கு சென்று வந்தார். ஏலியின் பராமரிப்பிலும் வழிநடத்துதலிலும் சாமுவேல் இறைநம்பிக்கையிலும் பக்தியிலும் வளர்ந்தார்.

ஓர் இரவில், வழமைபோல் ஏலி தனது உறைவிடத்திலும், சாமுவேல் கடவுளின் பேழை (உடன்படிக்கைப் பெட்டி) வைக்கப்பட்டிருந்த ஆண்டவரின் இல்லத்திலும் உறங்கிக்கொண்டு இருந்தனர். பத்துக் கற்பனைகள் எழுதிவைக்கப்பட்டிருந்த உடன்படிக்கைப் பெட்டிக்கு அருகில் விளக்கு ஒன்றும் ஒளிர்ந்து கொண்டிருந்தது. (அப்போது திடீரென ஒருசத்தம் தோன்றி,......)

கடவுள் : சாமுவேல்! சாமுவேல்!
(ஏலி தன்னை அழைத்திருப்பார் என்று நினைத்து சாமுவேல் எழுந்து ஏலியின் அறைக்குச் செல்லல்)

சாமுவேல் : இதோ நான் என்னைக் கூப்பிட்டீர்களா?

ஏலி : நான் உன்னை அழைக்கவில்லை, திரும்பிச் சென்று படுத்துக்கொள்.

கடவுள் : சாமுவேல்! சாமுவேல்! (இரண்டாவது முறையாக)
(சாமுவேல் ஏலியிடம் சென்று)

சாமுவேல் : இதோ! அடியேன். என்னை அழைத்தீர்களா?

ஏலி : நான் அழைக்கவில்லை மகனே! சென்றுபடுத்துக்கொள்

கடவுள் : சாமுவேல்,சாமுவேல் (மூன்றாவதுமுறையாக) (சாமுவேல் மீண்டும் ஏலியிடம் சென்று)

சாமுவேல் : இதோ! அடியேன். என்னை அழைத்தீர்களா? (சாமுவேலை அழைப்பது கடவுள்என்பதைஏலிஉணர்ந்தார்)

ஏலி : சென்றுபடுத்துக்கொள். உன்னை அவர் மீண்டும் அழைத்தால் அதற்கு நீ ஆண்டவரே பேசும், உம் அடியான் கேட்கின்றேன் என்றுபதில் சொல்

கடவுள் : சாமுவேல்,சாமுவேல்

சாமுவேல் : பேசும்,உம் அடியான் கேட்கிறேன்.

ஏலியின் புத்திரர்களின் தீயசெயல்களையும், அவர்களுக்கு எதிரான கடவுளின் திட்டத்தையும் கடவுள் சாமுவேலுக்கு அறிவித்தார்.

இவ்வாறாக சாமுவேல் கடவுளின் சத்தத்துக்கு செவிசாய்த்தார்.

## இந்தசம்பவத்தின் மூலம் நாம் கற்றுக்கொள்பவை:

- அன்னா தனது மகனை வாழ்நாள் முழுவதும் ஆலயப் பணிக்கு அர்ப்பணித்தார்.
- சிறுவயதில் இருந்தே சாமுவேல் கடவுளின் சமூகத்தில் வளர்ந்தார்.
- கடவுளின் அழைப்பு மக்களின் வயது எல்லைக்கு கட்டுப் பட்டதல்ல.
- கடவுளின் சத்தத்திற்கு செவிசாய்க்க எப்போதும் ஆயத்தமாக இருக்கவேண்டும்.
- நாம் விளங்கிக் கொள்ளாதவற்றை விளங்கிக்கொள்வதற்காக வளர்ந்தோரின் உதவியை நாடுவது நல்லது.
- பெற்றோர், ஆசிரியர், குருவானவர் ஆகியோரின் அறிவுரைகளை ஏற்று நடக்க வேண்டும்.
- இறைவன் தனது பிள்ளைகளிடம் இருந்து, அவர்கள் இறைவார்த் தையை விளங்கிக்கொள்ள வேண்டும் என்றும், ஒவ்வொரு நாளும் இறைவேண்டலில் ஈடுபடவேண்டும் என்றும், இறை வனை முறையாக வழிபடவேண்டும் என்றும் எதிர்பார்க்கிறார்.
- இறைசத்தத்தைக் கேட்டவுடன் தாழ்மையுடனும், நன்றியுள்ளத் துடனும் அதற்குக் கீழ்ப்படியவேண்டும்.

இளவயது சாமுவேலை அழைத்த கடவுள், தனது பணியில் பங்காளியாகச் செயல்படுவதற்கு உங்களைப் போன்ற சிறுவர்களையும் அழைப்பார். எவ்வாறான பணிக்கு கடவுள் நம்மை அழைத்தலும் அதனை ஏற்று பணியாற்ற வேண்டியது நமது கடமையாகும்.

*மனனவசனம்:*
*1 சாமுவேல் 3:10*

அப்பொழுது ஆண்டவர் வந்துநின்று, ''சாமுவேல், சாமுவேல்'' என்று முன்பு போல் அழைத்தார். அதற்கு சாமுவேல், 'பேசும், உம் அடியான் கேட்கிறேன்' என்று மறுமொழி கூறினான்.

செயற்பாடு

1. சாமுவேல் என்னும் பெயரின் பொருளை எழுதி, அப்பெயர் எவ்வாறு கொடுக்கப்பட்டது என்பதை விவரிக்கவும்.

2. கடவுளுடைய தொனி எமக்குகேட்கும் 3வழிகளை எழுதவும்.